# கல்கி

17.2.2008












அரசியல் தகுதியுடன், தம் சமூகப் பெண்களுக்கு நல்லது செய்யும் நோக்கில், மத ரீதியான பாதிப்புகளைக் களைய முற்படுகிறார் கவிஞர் சல்மா!

**- இரா.கல்யாணசுந்தரம், மதுரை**

பான்யன் அமைப்பு நடத்தும் ஆதரவற்ற குழந்தைகளுக்கான நிகழ்ச்சிகளில், நாட்டியம் ஆடும் பானுப்ரியாவுக்குப் பாராட்டுகள்.

**- கௌசல்யா ராகவன், சென்னை**

ஜாலி ஸ்டோர்ஸ் சூப்பர் ஜாலி! 'ஆயிரம் ரூபாய் ஏரோப்ளேன்!' ஆயிரம் முறை படித்தாலும் சிரிப்பு அடங்காது.

**- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்**

அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் எந்த ஒரு விஷயத்தையும், நம் தலைவர்கள் தவிர்க்கவேண்டும்.

**- த.அசாருதீன், பள்ளப்பட்டி**

எம்.ஜி.ஆரை மையமாக வைத்து, அனைத்துக் கட்சிகளும் வோட்டு வேட்டையில்தான் இறங்குமே தவிர, பிற நல்வழிகளுக்கு அவரைப் பின்பற்றாது!

**- இ.முகம்மது உசேன், திருச்சி**

'எதிர்ப்பு என்பது நாம் சரியான நிலைத்தான் எடுத்திருக்கிறோம் என்பதற்கான அடையாளம், கவிஞர் சல்மாவின் கூற்று நிதர்சன உண்மை!

**- அ.அனீஸ், திருச்சி**

புலிகள் குறித்த தராகவின் பதில், வெகு நுணுக்கமாகச் சிந்தித்து யதார்த்த நிலையைச் சுட்டியது. 'தராக'வுக்கு ஜே!

**- பெ.கலாசாமி, தூத்துக்குடி**

# அனுபவங்களின்

'பொய்' மின்னல் கதை, பெற்றோரைக் கவனிக்காமல் உதாசீனம் செய்பவர்களுக்குச் சுளீர் சாட்டையடி.

**- எஸ்.ராமசாமி, ஈரோடு**



கல்கி ராஜேந்திரன் எழுதும் '70லிருந்து 7 வரை' தொடர் அனுபவங்களின் அறுசுவை விருந்தாக இருக்கிறது. அடுத்தடுத்து என்ன சொல்லப் போகிறார் என்ற ஆவலைத் தூண்டுகிறது!

**- கோமதி நாராயணன், கொல்கத்தா**

மூலிகை சாணப் பவுடரைப் பயன்படுத்தி, ஆட்கொல்லி டெங்குவிலிருந்து விடுபடுவோம்.

**- வி.திலகம், திருநெல்வேலி**

## ஸ்பீட்

ஸ்ரீ லலிதாவில் அம்பாளின் கண்கள் பற்றிய சுதா சேஷய்யன் வர்ணனையைப் படிக்கும்போது மனசும் பிரகாசமாகிறது.

**- ஆர்.விஜயலக்ஷ்மி, சென்னை**

'நாகரிக வரம்புகள் மீறப்படுகிறபோது எச்சரிப்பது, பொது வாழ்வில் இருப்போரின்

**ப**றவைக் காய்ச்சல் நோய் தொடர்பான பேராசிரியர் ராவின் எச்சரிக்கையை அசைவப் பிரியர்கள் கருத்தில் கொள்ள வேண்டும்.

**- சி.மகேஷ், திருச்சி**

**அ**துதான் நியாயம்! கதையின் முடிவு தவறானது. வங்கியின் பணம் எப்படி வெளியே வந்தாலும் சரியல்ல.

**- ஜானகி, மும்பை**

**எ**ம்.ஜி.ஆர்., அ.தி.மு.க.வுக்கே சொந்தமானவர். அடுத்தவர்கள் சொந்தம் கொண்டாடுவது கன்னமிடுவதற்கு ஒப்பானதாகும்.

**- நாராயணன், திருச்சி**

# அறுசுவை விருந்து!

**க**னிமொழிக்கு அமைச்சராகும் ஆசை இல்லை எனும் செய்தி கேட்டு, மகிழ்ச்சிக் கடலில் தத்தளிப்பது போல் பிரதமரைச் சித்தரித்த உமது கார்ட்டூன், குபீர் சிரிப்புக்கு வித்திட்டது.

**- ம.ராஜேஸ்வரி, திருச்சி**

## போஸ்ட்

கடமை' - தலையங்கம் சூப்பர்!

**- கு.ப.இரகுநாதன், பூவிருந்தவல்லி**

சரத்குமார், கட்சிக்குக் கூட்டம் சேர்க்க கட்-அவுட் கலாசாரம் தேவைதான் என்றது, அவரது உள்நோக்கத்தைப் படம் பிடிக்கிறது.

**- எஸ்.கோபாலன், நங்கநல்லூர்**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# - மோதல் பின்னணி

"கடந்த இருபது மாத காலத்தில், தடை செய்யப்பட்ட புலிகள் இயக்கத்துக்கு ஆயுதம் கடத்திய குற்றத்திற்காகவும், ஆதரித்துப் பேசியதற்காகவும், பன்னிரெண்டு வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. 103 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். இதில் 11 பேர் புலிகள். தேசியப் பாதுகாப்பு சட்டப்படி 40 பேர் உள்ளே இருக்கிறார்கள். விடுதலைப் புலிகளை ஆதரிப்பதாக வீண்பழி சுமத்தி ஆட்சியை மாற்ற விரும்பினால், அந்த ஆட்சி மாற்றத்தை நாங்கள் சந்திக்கத் தயார்'' என்று சூடாகி விட்டார் கருணாநிதி. தம் உதவியாளர் சண்முகநாதன் வீட்டுத் திருமணத்தில், அவர் இப்படி ஆவேசமாகப் பேசியது காங்கிரஸ்காரர்களைக் கலக்கியிருக்கிறது.

முதல்வர், இவ்வளவு சீரியஸாக இந்தப் பிரச்னையில் பேசுவார் என்று, நாங்கள்கூட எதிர்பார்க்கவில்லை என்று சொல்கிறார்கள் மூத்த கழகப் பிரமுகர்கள்.

ஏற்கெனவே, விடுதலைப் புலிகள் விஷயத்தில் தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமியும்,

**"சட்டமன்ற கூட்டத்தொடரிலிருந்து, வெளிநடப்புச் செய்யலாமா" என்று பீட்டர் அல்ஃபோன்ஸ் மேலிடத்தில் கேட்க அவர்களும், "செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டனர்.**

ஈ.வி.கே.எஸ். இளங்கோவனும் ''தமிழகம் புலிகளின் வேட்டைக்காடாகி விட்டது'' என்று பேசியிருக்கின்றனர்.

பல கட்சிகளில் இருந்துவிட்டு, மீண்டும் காங்கிரசில் சேர்ந்த குமாரதாஸை வரவேற்கும் விதமாக நாகர்கோவிலில் நடந்த கூட்டம் அது. ''புலிகளை வளர விடாதீர்கள்; முளையிலேயே கிள்ளி எறியுங்கள். நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்தீர்கள் என்றும் எங்களுக்குத் தெரியும். ஏனென்றால், மத்திய அரசிலும் புலனாய்வுப் பிரிவு உண்டு'' என்றார் கூட்டத்தில் பேசிய மத்திய நிதியமைச்சர், சிதம்பரம், உள்ளிட்ட பலர் இப்படிப் பேசியது, தமிழக முதல்வர் கருணாநிதியைக் காயப்படுத்தி விட்டது. காங்கிரஸ் எதோ ஒரு முடிவெடுத்துத்தான் இப்படிப் பேசுகிறதோ என்று எண்ண வைத்துவிட்டது.

சட்டமன்றத் தொடரில் கடைசி நாள் அன்று, சபையில் புலிகள் பிரச்னையைப்



# கலைஞர் Vs

பொடா வழக்கில், வைகோ நிலை குறித்து மாறுபட்ட கருத்துக்கள் வருகின்றன. உண்மை நிலை என்ன?



பொடா வழக்கில் வைகோ வுக்கு ஆஜரான வழக்கறிஞர் தேவதாஸ் சொல்கிறார்...

"பொடா மறுபரிசீலனை குழு வைகோ மீது எந்தத் தவறும் இல்லை என்று சொல்லிவிட்டது. ஆனால், அரசு நீதிமன்றத்தில் முறைப்படி மனு செய்து, பின்னர் விடுதலை செய்யப்பட வேண்டும் என்பது ஒரு கருத்து. ஆனால், குழு சொன்னவுடனேயே தானாகவே அவர் வழக்கிலிருந்து விடுவிக்கப்பட்டதாகக் கருதப்பட வேண்டும் என்பது எங்கள் நிலைப்பாடு. இந்தப் பிரச்னை உச்ச நீதிமன்றத்தில் இருக்கிறது. அடுத்து, அதைத் தொடர்ந்து அரசு தரப்பு வழக்கறிஞர் வைகோவைத் தீவிரவாத செயல்களுடன் தொடர்பு படுத்தி, பொடா நீதிமன்றத்தில் அறிக்கை கொடுத்தார். எனவே, வழக்கை வாபஸ் பெற முடியாது என்றது பொடா நீதிமன்றம். இது தொடர்பான பிரச்னையும் உச்சநீதி மன்ற பரிசீலனையில் இருக்கிறது. பொடா வழக்கைப் விவாதித்த வரை, வைகோ ஜாமீனில் இருக்கிறார் என்பதே இப்போதைய நிலைப்பாடு. அவர் உறுதியாகவும், இறுதியாகவும் இன்னமும் விடுதலை செய்யப்படவில்லை.

பெரியது எரிகிற நெருப்பில் எண்ணெய் ஊற்றியது போல் ஆகிவிட்டது. காங்கிரசும் அ.தி.மு.க.வுடன் வெளிநடப்பு செய்ய வேண்டிய அவசியம் வந்துவிட்டது. ஆனால், அப்படி அ.தி.மு.க.வுடன் சேர்ந்து வெளிநடப்பு செய்தால், அது தவறான சிக்னலைக் கொடுக்குமே என்று தயங்கினார்கள் காங்கிரஸ் உறுப்பினர்கள். மேலிட காங்கிரஸ் பொறுப்பாளரான அருண்குமாரிடம் மூன்று தடவை பேசி, 'வெளிநடப்பு செய்ய வேண்டுமா?' என்று பீட்டர் அல்போன்ஸ் கேட்க அவரும், 'செய்யுங்கள்' என்று சொல்லிவிட்டார். காங்கிரஸ் வெளிநடப்பு செய்தது கருணாநிதிக்கு அதிர்ச்சி. இந்தப் பின்னணியில் தான் அவர் சூடாகிவிட்டார்.

**வி**வகாரம் ஏடா கூடமாகி விடப் போகிறதே என்று, இப்போது கருணாநிதியைச் சமாதானப்படுத்தும் வகையில்; காங்கிரஸ் மேலிடம் 'தி.மு.க. எங்கள் மதிப்பு மிக்க கூட்டணி கட்சி, உறவில் ஒன்றும் விரிசல் இல்லை' என்று அறிக்கை விட்டிருக்கிறது. இந்த விவகாரத்தில் காங்கிரஸ் பிரமுகர்கள் இரண்டுவிதமான எண்ண ஓட்டங்களில் இருக்கிறார்கள். "கருணாநிதி புலிகள் விஷயத்தில் சிறப்பாகவே நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார். தி.மு.க.-அ.தி.மு.க. இரண்டையும் விட்டு, சிதம்பரத்தை முன்னிறுத்தி தே.மு.தி.க.வுடன் இணைந்து, மூன்றாவது அணி அமைக்கும் முயற்சியில் ஈடுபடும் காங்கிரஸ்காரர்களே இப்படிப் பேசி, கருணாநிதியைச் சங்



● ப.சிதம்பரம்

● ஈ.வி.கே.வி.எஸ்.



# காங்கிரஸ்

கட்டுப்படுத்திகிறார்கள்' என்கிறார் வாசன் தரப்பு பிரமுகர் ஒருவர். இளங்கோவன் தரப்போ 'ஜெயலலிதா ஆட்சி செய்த போது, கருணாநிதியை நள்ளிரவில் கைது செய்தபோது உடனடியாகக் கண்டித்தவர் இளங்கோவன். தி.மு.க.வுக்கும், அ.தி.மு.க.வுக்கும் மாற்றாக காங்கிரஸ் ஆட்சியைப் பிடிக்க வேண்டுமனால், மக்கள் பிரச்னைகளை எடுத்துப் பேச வேண்டும். புலிகள் பிரச்னையைத் தவிர, சட்டம், ஒழுங்கு, மணல் திருட்டு, ஆகியவை குறித்துப் பேசும் போதும் கருணாநிதி ஆட்சியை மிக உக்கிரமாக விமர்சித்திருக்கிறார் இளங்கோவன். மற்ற காங்கிரஸ் கட்சிக்காரர்களும் ஆள்பவர்களுக்குத் தாளம் போடுவதற்குப் பதில், இளங்கோவனைப் போல் மக்கள் பிரச்னைகளைத் தொடர்ந்து பேசி வந்திருந்தால், தே.மு.தி.க. என்ற கட்சியே உருவாகியிருக்காது. தி.மு.க., அ.தி.மு.க.வுக்கு மாற்றாக மக்கள் எங்களைத்தான் தேர்ந்தெடுப்பார்கள்' என்றும் சொல்கின்றனர் இளங்கோவன் தரப்பினர்.

"ஆட்சி மாற்றம் குறித்து சிதம்பரம், நாகர்கோயிலில் ஏதும் பேசவில்லை" என்கிறார் தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி. 'ராஜீவ் காந்தி இறந்த பிறகு இளங்கோவன் சாப்பிடாமல் இருக்கிறாரா; தூங்காமல் இருக்கிறாரா?' என்று திருமாவளவன் பேசியது காங்கிரஸ்காரர்களைக் கொந்தளிக்க வைத்துவிட்டது. 'புலிகளை ஆதரித்துப் பேசினாலும், எழுதினாலும், ஆயுதம் கடத்தினாலும், தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று பேசினேன். திருமாவளவன், தடைசெய்யப்பட்ட இயக்கத்தை அப்பட்டமாக ஆதரித்துப் பேசுகிறார். எனவே, அவரைக் கைது செய்ய வேண்டும் என்பதைத் தவிர, வேறொன்றும் கூட்டத்தில் பேசவில்லை' என்கிறார் இளங்கோவன். புலிகள் பிரச்னையில், அ.தி.மு.க.வும் - காங்கிரஸும், ஒரே கருத்தைக் கொண்டிருந்தாலும், இனி ஜெயலலிதாவுடன் கூட்டு இல்லை என்பதைக் காங்கிரஸ் சொல்கிறது. வரும் பாராளுமன்றத் தேர்தலில், தி.மு.க.வுடன் தான் கூட்டு என்பதிலும் உறுதியாக இருக்கிறதாம் காங்கிரஸ் மேலிடம்.

* கிருஷ்ணசாமி



'எங்களையும் ஆட்சிப் பொறுப்பில் சேர்த்துக் கொண்டால் இது போன்ற பிரச்னைகள் வராது' என்கிறது காங்கிரஸ் வட்டாரம்.

இந்த விவகாரத்தில் காங்கிரஸ்காரர்கள் கருணாநிதியைப் போட்டுத் தாக்கியதை, சோனியா விரும்பவில்லை என்கிறார்கள். இது விஷயமாகத் தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமி டெல்லிக்கு அழைக்கப்பட்டிருக்கிறார்.

'சட்டமன்றத்தில் ஜெ. பேசும்போது பீட்டர் அல்போன்ஸ் அரசின் உதவிக்கு வரவில்லை என்பது கருணாநிதியின் வருத்தம். "சில சூழ்நிலையாலும், கட்டாயத்தாலும் நான் அப்போது பேசாமல் இருந்தேன். சில சமயம் பேசாமல் இருப்பதே நல்லது என்ற அடிப்படையில் நடந்த நிகழ்வு, மற்றபடி இந்த பிரச்னையில் எங்களுக்கும் தி.மு.க.வுக்கும் எந்த பிளவும் இல்லை, உரசலும் இல்லை" என்கிறார் பீட்டர் அல்போன்ஸ்.

புலிகள் பிரச்னையில் காங்கிரஸ் உட்பட தோழமை கட்சிகளுக்கும் பொறுப்பு உண்டு' என்று சொல்லியிருக்கிறார் கருணாநிதி. "மெஜாரிட்டி இல்லாமல் எங்கள் ஆதரவோடு ஆட்சி நடத்தும் கலைஞர், எங்களையும் ஆட்சிப் பொறுப்பில் சேர்த்துக் கொண்டிருந்தால், இதுபோன்ற குழப்பங்கள் நிகழ்ந்திருக்க மாட்டா! இப்போதும் காலம் இருக்கிறது' என்று சொல்கிறார் ஒரு மூத்த காங்கிரஸ் பிரமுகர்!

– ப்ரியன்

# துராசு

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

? சானியா மிர்ஸா, ஆசியாவின் நம்பர் ஒன் டென்னிஸ் வீராங்கனையாகத் தரம் உயர்ந்திருப்பது மகிழ்ச்சிதானே?

! மகிழ்ச்சிதான்; ஆனால், இந்திய மண்ணில் நடைபெறும் டென்னிஸ் போட்டிகளில் கலந்துகொள்ள, அவர் தயங்கும் அளவுக்கு, இங்கே மத அடிப்படைவாதிகளும் மீடியாவும் நடந்துகொண்டதுதான் வேதனை.

● பிரபா லிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்

? விஜய டி.ராஜேந்தரின் கர்ஜனை அடங்கிவிட்டதே?

! நீங்க வேற! 'காளை' படத்தைச் சரியாக எடுக்கவில்லை என்று, புதிய கர்ஜனையுடன் தருண் கோபியை அடித்தேவிட்டாராமே!

● உமரி பொ.கணேசன், மும்பை - 37

? காமராஜர், அண்ணா பெயர்களை எல்லோரும் உபயோகப் படுத்துகிறார்கள். அது மாதிரிதானே எம்.ஜி.ஆர். பெயரும்... அதற்கு ஜெயலலிதா எதிர்ப்புத் தெரிவிப்பது ஏன்...?

! கொள்கை அடிப்படையில் எதிர்ப்பது மக்கள் அறிவுக்கு வேலை; உணர்ச்சிகளைத் தூண்டும் விதத்தில் எதிர்ப்பது எளிய வேலை. ஜெ. இரு விதத் தாக்குதல்களையும் மாறிமாறி நடத்துகிறவர்தான்!



* ஆட்ட அல்லல்!

● எம்.சிவகுருநாதன், தஞ்சை

? மஹாத்மா காந்தி கொல்லப்பட்டபோது 'ஆ...ஆ...!' என்றுதான் சொன்னாரேயொழிய 'ஹே ராம்!' என்று அல்ல, என்பதாக தயாசங்கர் சுக்லா என்ற பத்திரிகையாளர், தாம் எழுதிய புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளாராமே?

! காந்திஜி, நேருஜி பற்றியெல்லாம் விஷமத்தனமாக எழுதி, பிரபலமடையலாம் என்ற கோஷ்டியில் மேலும் ஒருவர். காந்திஜி சுடப்பட்டதும் போலீஸில் பதிவு செய்யப்பட்ட எஃப்.ஐ.ஆரில், 'ராம் ராம்' என்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன என்பது, இது தொடர்பாகப் பின்னர் வந்த செய்தி.

● ஏ.கே.நாசர், திருப்பட்டினம்*

? சிந்திக்கச் சிந்திக்க தங்களை அச்சுறுத்தும் பிரச்னை எது?

! நம் நாட்டில் நிலவும் சுகாதாரக் குறைவு. பொருளாதாரம் எவ்வளவு வளர்ந்தாலும் இது நீடிக்கிறதே; மேலும் அதிகரிக்கிறதே!

● ஜெயக்குமார், மதுரை

? சரோஜா தேவி விஷயம் உண்மையா சார்?

# நீங்கள் கேட்டவை

! உண்மையோ பொய்யோ, பரபரப்பு மீடியாவின் போக்கு விகாரமானது; சரோஜா தேவியின் ரியாக்ஷன் கண்ணியமானது.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? மத்திய பட்ஜெட் மிகக் கடுமையாக இருக்கும் என்று ப.சிதம்பரம் சூசகமாகச் சொல்கிறாரே?

! மத்திய அரசின் டாம்பீக மற்றும் உற்பத்திக்கு உதவாத செலவினங்களுக்கெல்லாம், அவர் நிதி ஆதாரத்தைத் தேடியாக வேண்டுமே! கசக்கிப் பிழிந்தால்தானே நடக்கும்! மாவுக்கேற்ற பணியாரம் தயாரிப்பது அவர் வேலையாகிவிட்டது.

● இரா.சக்கரபாணி, மதுரை









? முன்னாள் அரசியல் தலைவர்கள் மற்றும் பத்திரிகையாளர்களின் தொலைபேசிகள் ஒட்டுக் கேட்கப்படுவது அதிர்ச்சியளிக்கக் கூடியதா?

! ஆரம்பத்தில் அதிர்ச்சி அளித்தது; தொடர்கதையான அதிகாரத் துஷ்பிரயோகம் இப்போது வருத்தமளிக்கிறது.

● கே.என்.பாலகிருஷ்ணன், சென்னை - 91

? 'திருமணத்துக்குப் பிறகு, குழந்தை பிறந்தபின் தரும் சீர் வரிசைகள் வரதட்சணை ஆகாது' என்று ஒரு வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பு கூறியுள்ளதே?

! திருமணத்துக்குப் பிறகு, மகிழ்ச்சியுடன் தரப்படும் சீர்வரிசை, வரதட்சணை ஆகாதுதான்; ஆனால், வற்புறுத்தி வசூலிக்கப்படும் சீர்வரிசை வரதட்சணையைவிடக் கொடுமையானது. இதற்குத் தனிச் சட்டம் இயற்றவேண்டும் போல!

● க.சம்பத்,வேலாயுதம்பாளையம்

? ஜெயலலிதாவின் திடீர் சட்டசபை வருகையும், ஆவேசப் பேச்சும் வெளிநடப்பும் குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

! திடீர் வருகை வியப்பும் மகிழ்ச்சியும் உருவாக்கியது. ஆவேசப் பேச்சில் எழுப்பப்பட்ட பிரச்சினைகள், குற்றச்சாட்டுகள் மன நிறைவையும், அதில் இருந்த தனி

---

# செம்மொழி மையம் வந்தால் சென்னைத் தமிழ் சீராகுமா?





நடிகர் நாக் குதல் கவிப்பையும் அளித்தன. வெளிநாட்டிப்பு பெரிய சமாசாரம்.

● வைகை வளவன், முடக்கத்தான்

? 'சேது சமுத்திர திட்டம், இந்தியாவுக்கு நிச்சயம் பேராபத்தைத் தேடித் தரும் மோசமான திட்டம்' என்று கடலோரக் காவல் படைத் தலைபதி எச்சரித்திருக்கிறாரே?

! அப்புறம் உயர் மட்டத்தில் கடற்படைத் தளபதி, தமது அறிக்கையில், 'பாதுகாப்பு பிரச்னைகளைச் சமாளிப்பது கடற்படையின் கடமை; எண்ணெய்க் கப்பல் தவிர, பாக்கி கப்பல்கள் கால்வாய் வழி செல்லும்' என்றெல்லாம் சமாளிப்பு நாடகம் நடத்தி விட்டாரே!

● ஜி.கிருஷ்ணமூர்த்தி, சென்னை - 1

? நகரை அசுத்தம் செய்வோருக்குத் தண்டனை - சென்னை மாநகராட்சியின் இந்த முடிவுக்கு மக்கள் ஆதரவு எந்த அளவுக்கு இருக்கும்?

! மக்களுக்குச் சுகாதார வசதி களை அதிகரிக்காமல், அசுத்தம் செய்வோருக்குத் தண்டனை மட்டும் விதிப்பது கொடூரம்; லஞ்ச - ஊழல் அதிகரிக்கவே வழி செய்யும்.

● டேவிட் ராஜன்,

சென்னை - 114

? வணக்கத்துக்குரிய பண்பு எது?

! "அஹிம்சைக்கு ஒரு காந்தி' என்று போற்றப்படுவது போல், எந்த ஒரு விஷயத்துக்காக நீங்கள் நினைவில் கொள்ளப்பட விரும்புகிறீர்கள்?' என நிருபர்கள் கேட்க, 'எளிமைக்கும் அடக்கத்துக்கும் உதாரணமாக விரும்புகிறேன். இளம்சேய லட்சமக்களின் முகங்களில் புன்னகையைப் பார்க்க ஆசைப்பட்டவர் என்று அறியப்பட விரும்புகிறேன்' என்று அப்துல் கலாம் அளித்த பதில்.

● சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி ❑

? சென்னையில் தமிழ் செம்மொழி மையம் வந்தால், சென்னைத் தமிழ் சீர் திருந்தும் என எதிர்பார்க்கலாமா?

! இன்னாப்பா நீ பட்டா பேஜாரான கொஸ்டினெல்லாம் கேட்டுக்கினு...!

● ஜி.நீலா, சென்னை - 78

? 'ஒரு விஷயம் நூறு பேருக்குத் தெரிய வேண்டுமானால் டெலிபோன் வேண்டும்; ஆயிரம் பேருக்குத் தெரிய வேண்டுமானால் டெலிவிஷன் வேண்டும்; லட்சம் பேருக்குத் தெரிய வேண்டுமானால் 'ஒரே ஒரு பெண் போதும்' என்று பரமஹம்ஸ நித்யானந்தர் தமது டி.வி உரையில் சொல்கிறாரே...? பெண்கள் முன்னேறி வரும் கால கட்டத்தில் இத்தகைய பேச்சு தேவையா?

! காலத்துக்கு ஒவ்வாத கமென்ட்! இன்றைய சூழலுக்கு ஏற்ப பெண்களுக்கு, ஆன்மிகவாதிகள் அழகாக வழிகாட்டினால் நல்லது. அது இல்லாவிட்டால், கேலி செய்யாமலாவது இருக்க வேண்டும்.

● ஏ.எஸ்.யோகனாந்தம், கலிங்கியம்

? 'தமிழ் சினிமாவில் கலை இல்லை; அடிமைத்தனம்தான் உள்ளது' என்கிறாரே தங்கர்பச்சான்?

! ரொம்பச் சரி. டைரக்டருக்குப் புரொட்யூசரிடம்; புரொட்யூசருக்கு ஹீரோவிடம்; ஹீரோவுக்கு ஃபைனான்சியரிடம் அடிமைத்தனம். பொதுவாக, எல்லோருக்கும் பணத்திடம் அடிமைத்தனம்! ○

| |
|---|
| ❑ ரூ 100 பரிசு பெறுபவர்: |
| சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி |
| ✱ ரூ 50 பரிசு பெறுபவர்: |
| எ.கே.நாசர், திருப்பட்டினம் |

# தங்கம்

அண்ணன் - தங்கை பாசத்தைச் சொல்ல வந்திருக்கும் மற்றுமொரு படம். தங்கைக்காகவே வாழ்ந்துவரும் சத்யராஜ், ஒரு கட்டத்தில் தங்கையையே இழந்துவிட்டுத் தவிக்க, காரணமானவர்களைக் கண்டுபிடித்துக் கல்லறைக்கு அனுப்பி வைக்கிறார். முரட்டு உடம்பும் குழந்தை மனசுமாக வெள்ளந்தனத்தை ஓரங்கட்டிவிட்டு, பாசக்கார அண்ணாச்சியாக பவனி வந்திருக்கிறார் சத்யராஜ். தங்கை சொன்ன ஒரு வார்த்தைக்காக கல்யாணம் செய்துகொள்வதில் தொடங்கி, மனைவியைக்கூட மறந்துவிட்டு, தங்கையின் நல்வாழ்வுக்காகத் தவமிருக்கும்போது, 'இப்படியொரு பாசமா!' என்று வியக்க வைக்கிறார். அடிதடியில் அசத்துபவர், டூயட்டெல்லாம் பாடிக் கடுப்பேற்றுகிறார்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு, மறுபடியும் 'காளை'யாக கவுண்டமணி! தற்கால தமிழ் சினிமாவை அவர் நக்கலடிக்கும்போதெல்லாம் தியேட்டர் குலுங்குகிறது. அதேசமயம், அவ்வப்போது 'கடி'க்கவும் செய்து கொடுமைப்படுத்துகிறார். கதாநாயகியாக வரும் மேகா நாயருக்கு சத்யராஜைப் பார்த்து ஏங்குவதற்கும், கண்ணீர் விடுவதற்குமே நேரம் சரியாகப் போய்விடுகிறது. கிடைத்த கேப்பில் டான்ஸ் ஆடிவிட்டுப் போகிறார். தங்கையாக வரும் ஜெயஸ்ரீ, இந்த ஃபிட்வல் யுகத்திலும் விதிவிலக்காக இருக்கிறாரே! மற்றபடி, பாசத்தைப் பக்கம்பக்கமாக வசனம் பேசிக்கொல்லாமல், உணர்வுகளாலேயே உள்ளம் தொடுகிறார்.

மகாதேவன் - டெல்லி குமார் நட்பை அத்தனை அழுத்தமாகக் காட்டும்போதே, பின்னால் ஆப்பு வரும் என்று தெரிந்துவிடுகிறது. சத்யப்ரியா கத்திக்கொண்டே இருப்பது சலிப்பைத் தருகிறது. சண்முகராஜன், விழிகளாலேயே வில்லத்தனம் செய்யலாம். ஓவர் ஆக்டிங் உடம்புக்கு ஆகாது. பாலாசிங்குக்கு மேக்கப் அதிகம். ஆனாலும், எள்ளலான நடிப்பில் தம்மை நிரூபிக்கிறார். யார் அந்த போலீஸ்கார விகவாசி? காமெடிக்குக் காவடி எடுக்கிறார்.

ஸ்ரீகாந்த் தேவாவா இசை! நம்ப முடியவில்லை. இரண்டு மெலடிகளில் இனிமை சேர்க்கிறார். பின்னணியிலும் சோடை போகாத தேர்ச்சி. சங்கரின் ஒளிப்பதிவில் கிராமம், கிராமமாக இருக்கிறது. இயக்கம் கிச்சா. கதையில் பழைய வாசம் அடித்தாலும் காமெடி, ஆக்‌ஷன் என்று கலந்துகட்டிக் கொடுக்க முயற்சி செய்திருக்கிறார். இடைவேளைக்குப் பிறகு திரைக்கதையே ஸ்லோ மோஷனில் நகர்வது பெரிய மைனஸ்!

- அனாமிகா



# நாடாளுமன்றத்தில் காமெடி

● **எம்.அசோக்ராஜா,**
**அரவங்குறிச்சிப்பட்டி**

'உம்மணா மூஞ்சிகளைப்' பார்க்கும் போது, உங்கள் மனத்தில் என்ன சொல்லத் தோன்றுகிறது...?

முகமலர்ச்சி என்னும் ஆடை அணியாத 'அம்மணா மூஞ்சிகள்'.



● **அ.ஷண்முக சுந்தரம், பெங்களூரு**

நீங்கள் சபாநாயகரானால், நாடாளுமன்றத்தில் எப்படி அமைதியை ஏற்படுத்துவீர்கள்?

எனது காமெடி டிராமாவைப் போட்டு, லோக் சபாவை ஜோக் சபாவாக்குவேன். நாடாளுமன்ற உறுப்பினர்களை நாடகத்தால் ஆண்டு, அவர்களது வாக்குவாதத்தை ஜோக்குவாதத்தால் வென்று அமைதிக்குள்ளாக்கி, உறுப்பினர்களைச் சிரிப்பினர்களாக்குவேன்!

● **ரகுநாதன், சென்னை**

Will power கொண்ட விஸ்வாமித்திரர், மேனகையிடம் மயங்கலாமா..?

விஸ்வாமித்திரரின் will powerஐ மயங்க வைத்தது மேனகையல்ல, காமனின் 'வில் power' விளக்கமாக ஒரு வெண்பா.

'காவகத்தில் கண்மூடி மோனத் தவமிருந்தோன்
மேனகையால் மேன்மை தனையிழந்தான் - ஞானப்
பழம்நழுவி காமத்துப் பாலில் மெய்தவறி
விழவைக்கும் மன்மதன் வில்...'

● **மீனா ரெங்கனாதன்,**
**மேற்கு மாம்பலம்**

அறுபதாவது பிறந்த நாளை, அறுபதாம் கல்யாணம் என்கிறார்கள். திருமண நாள் அன்றுதானே தாலி கட்டிக்கொள்ள வேண்டும். அறுபதாம் பிறந்த நாளைக்கும் தாலி கட்டிக்கொள்கிறார்களே ஏன்?

உயிர் பிரியாமலிருக்க எத்தனையோ மருந்து மாத்திரைகள் உள்ளன. உறவு பிரியாமலிருக்க ஒரே மருந்து, மனம். அதாவது 'திருமண(ம)ம்'. அந்த மனத்தின் மணத்தை, அறுபதாம் பிறந்த நாளன்று வாரி, அறுபதாம் திருமண நாளன்று, காண வந்த கும்பலில் விவாகரத்து எண்ணத்தில் இருக்கும் தம்பதிகள், முகர்வதால் மனம் மாறலாம் அல்லவா. என்னைக் கேட்டால், விவாகரத்துகள் ரூபாய்க்கு எட்டு என்று பெருகிவிட்ட இக்காலத்தில், ஒவ்வொரு பிறந்த நாளன்றும் கணவர்கள், 'தாலி மீல்ஸ்' பரிமாறிய அந்தத் தங்கக் கை மகராசிக்கு, தங்கத் தாலி கடன் வாங்கியாவது கட்ட வேண்டும். மனைவியிடம் பட்ட கடனைத் தீர்க்க, அவளை மீண்டும் கணவன் கடன் வாங்கிக் கல்யாணம் செய்துகொள்வதில் தவறில்லையே!




● **வீ.பெரியசாமி, தேனூர்**

***மொட்டைக் கடுதாசி எழுதியிருக்கிறீர்களா...?***

பள்ளி நாட்களில் என்னைப் பாடாய்ப் படுத்திய, கிளாஸ் லீடரைப் பற்றித் தாறுமாறாக, ஒரு 'மொட்டைக் கடுதாசி' எழுதி, ஹெட் மாஸ்டருக்கு அனுப்பிவிட்டேன். மறுநாள் ஹெட் மாஸ்டர் என்னைக் கூப்பிட்டனுப்பி, நான் எழுதிய மொட்டைக் கடுதாசியை என் முகத்தில் விட்டெறிந்து, மொட்டையாகும் அளவுக்கு என் தலையில் குட்டினார். 'நான்தான் எழுதினேன் என்பது, இவருக்கு எப்படித் தெரிந்தது' என்று குட்டிய வலியையும் மறக்க வைத்த ஆச்சரியத்தோடு, எழுதிய மொட்டைக் கடுதாசியைப் பிரித்துப் பார்த்தேன். அதில் கடைசி வரியில், 'இப்படிக்கு பெயர் சொல்ல விரும்பாத - மோகன், 7th Std, C-Section' என்று எழுதித் தொலைத்த என் மேதாவித்தனத்தை மெச்சி, என் தலையில் நானே குட்டிக்கொண்டேன்.

# ட்ரமா?!

● **எஸ்.உஷா சுதர்சன்,**

**திருச்செங்கோடு**

***நாய் வாலை நிமிர்த்த முடியாது என்கிறார்களே... நிஜமாவா...?***

'நாயே ஏ சோதா' என்று முகாரி ராகத்தில் கடுப்போடு கீர்த்தனையே பாடும் அளவுக்கு, நாய்களால் 'நாய் படாத பாடு' பட்ட அனுபவஸ்தன் அடியேன். நாய் விஷயத்தில், நான் எதையும் நம்புவதாக இல்லை. இப்படித்தான் 'குரைக்கிற நாய் கடிக்காது' என்பதை நம்பி, தெரு நாய் ஒன்றைத் தெனாவட்டாக நெருங்க, அது என் ஆடு சதையைக் கடித்து, தெருவில் 'ஆடா சதையாக' துப்பிவிட்டது. 'பழமொழியை மீறி ஏன் கடித்தாய் பைரவா?' என்று பரிதாபகரமாக நான் அந்த வீதி நாயிடம் நீதி கேட்க, பதிலுக்கு அது 'கிட்ட வராதே... கடிப்பேன், என்று நான் என் பாஷையில் குரைத்துச் சொன்னதை குறைத்து மதிப்பிட்டது உன் தவறு' என்று நக்கலாகக் கூறி, நிமிர்த்த முடியாத தன் வாலை நிமிர்த்தி ஆக்ரோஷமாக ஆட்டி வேறு காட்டியது. 'நாய் வாலை நிமிர்த்த முடியாது' என்பதை நம்புகிறவர்கள், 'காதிலே பூ வைத்திருப்பவர்கள்' என்றால், 'வாலை ஆட்டும் நாய் நம் மீது பாசத்தைப் பொழிகிறது' என்பதை நம்புகிறவர்கள், 'காதில் பிருந்தாவன் கார்டனையே' வைத்திருக்கும் அப்பாவிகள் என்று அர்த்தம்...

● ***ச.நாராயணன்,***

***பாளையங்கோட்டை***

***ஒரு வேளை பெண்களே படைக்கப் படாமல், வெறும் ஆண்கள் மட்டுமே படைக்கப்பட்டிருந்தால்...?***

Female இல்லாததால், இனிமேல் மேலும் maleகளைப் படைக்க முடியாமல் போய்விடும். பெண்ணின் பரிவு, பாசம், அன்பில் திளைக்காததால், இதுவரை படைக்கப்பட்ட maleகள், ani'male'ஆகி விடுவார்கள்.



# கல்கி



2008 பிப்ரவரி 17
சர்வஜித் மாசி 5
மலர் : 66
இதழ் : 29

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிட்டி பாப்பா
- *பாரதியார்*

## அன்ஸாரியின் ஆதங்கம்!

தமிழக சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவர் ஜெயலலிதாவின் சமீபத்திய பேச்சு, அதன் பின்விளைவான அமளி, தொடர்ந்து ஜெ. வெளிநடப்புச் செய்தது என்று அனைத்துமே இன்றைய சட்டமன்றச் செயல்பாடுகளின் வரிசைக் கிரமப்படிதான் நடந்து முடிந்துள்ளன! இன்று நாட்டில் அனேகமாக எல்லாச் சட்டமன்றங்களிலும் இதுதான் நடைமுறை! ஒரு விஷயத்தை விமர்சித்தோ எதிர்த்தோ பேசுபவர், அதை மக்கள் நலன் கருதிச் செய்வதற்குப் பதிலாக, தன்னுடைய சாமர்த்தியத்தை வெளிப்படுத்தவும், எதிராளியை முட்டாளாகச் சித்தரிப்பதற்காகவும்தான் பேசுகிறார். இதனால், மாநில சட்டசபைகளும் நாடாளுமன்ற அவைகளும் விவாதக் களங்களாக விளங்குவதற்குப் பதிலாக, அரசியல் ரீதியான அற்பச் சண்டைகளின் அரங்குகளாகி விட்டன! ஆரோக்கியமான சிந்தனைகளாலும், கருத்துப் பரிமாற்றங்களாலும் பலப்படுத்தப்பட்டு, மசோதாக்கள் சட்டமாவதற்குப் பதிலாக, அள்ளித் தெளித்த அவசரக் கோல முடிவுகளே இந்த அவைகளில் எடுக்கப்படுகின்றன.

இதனைச் சுட்டிக்காட்டி மிகுந்த கவலையுடனும் அக்கறையுடனும் பேசியிருக்கிறார் நமது துணை ஜனாதிபதி முகமது அன்ஸாரி. மாநிலங்கள் அவைத் தலைவர் என்கிற முறையில், கட்சிக் கொறடாக்களுக்காக மும்பையில் நடந்த மாநாட்டில் பேசிய அன்ஸாரி, அதிகார வர்க்கத்தின் கொள்கை ரீதியான முடிவுகளை மக்கள் மீது திணிப்பதற்கான களமாகவே மக்களவையும் மாநிலங்களவையும் மாறிவிட்டதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

தமது கூற்றுக்கு ஆதாரமாக அன்ஸாரி முன் வைத்த சில புள்ளி












விவரங்கள், உலகின் மிகப் பெரிய ஜனநாயக அமைப்பில் உள்ள ஓட்டைகளை அம்பலப் படுத்துகின்றன.

மாநிலங்களவை கூட்டத்தொடர் அமர்வுகளின் எண்ணிக்கை, கடந்த பத்தாண்டுகளில் (1992 - 2001) இருபது சதவிகிதம் குறைந்துள்ளது. மக்களவை கூட்டத்தொடர் அமர்வுகளின் எண்ணிக்கையோ முப்பத்து நான்கு சதவிகிதம் குறைந்திருக்கிறது. மாநில சட்டமன்றத் தொடர் அமர்வுகளின் சராசரி எண்ணிக்கையோ இன்னும் மோசம். ஆண்டொன்றுக்கு இருபது முதல் ஐம்பது அமர்வுகளே நடைபெறுகின்றன.

மக்களவை கூட்டத்தொடர் கால அளவில், இருபத்தோறு சதவிகித நேரம் ஒத்திவைப்பில் கடந்துவிடுகிறது. இந்த இழப்பு, மாநிலங்கள் அவையிலும் சமீப காலமாக அதிகரித்து வருகிறது.

ஆக, முக்கிய முடிவுகளை எடுப்பதற்கான விவாத நேரமும் குறைந்துவிட்டது; அவ்வாறு குறைந்து போன நேரத்தில் உருப்படியான விவாதங்களும் நடைபெறுவதில்லை!

நடைபெறும் ஒரு சில விவாதங்களும்கூட வெறும் வார்த்தை ஜாலங்களாகவோ, தனி நபர் தாக்குதல்களாகவோ மாறிவிடுகின்றனவேயொழிய, பிரச்னைகளை ஆழமாக அலசும் மனப்பாங்கு இல்லை என்பதையும் அன்ஸாரி சுட்டிக்காட்டி வருத்தப்பட்டிருக்கிறார்!

கட்சிக் கொறடாக்கள் மாநாட்டில் பேசியதால் அன்ஸாரி கொறடாக்களின் பொறுப்புகளையும் நினைவூட்டியிருக்கிறார். 'கட்சிக் கொறடாக்கள், கட்சி மேலிடம் வழங்கும் ஆணைகளை நிறைவேற்றும் கைப்பாவைகளாக இருக்கலாகாது. அவை நடவடிக்கைகள் முட்டுக்கட்டைகளின்றி நடக்கவும், பயனுள்ளதாக அமையவும் பாடுபடுவது உங்களுடைய பொறுப்பு' என்று பேசியவர், அவை உறுப்பினர்களுக்கு வழிகாட்டுவதுடன், கட்சித் தலைமைக்கும் கொறடாக்கள் அறிவுரை கூற வேண்டும் என்று கடமையை எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

அன்ஸாரி வரிசைப்படுத்தியுள்ளவை அனைத்துமே நாம் மறந்துபோய்விட்ட ஜனநாயக மரபுகள்! உயர் மரபுகளின் உட்பொருளை உணர்ந்து, அவற்றைப் பேணிக் காத்தால்தான் ஜனநாயகம் அர்த்தமுள்ளதாக இருக்கும்; முழுமை பெறும்; பயன் தரும். உயர் மரபுகளை உதறிவிட்டு, சட்டமன்றத் தொடரை, வெறும் சடங்காக்கி வாய்ச்சண்டைக்குக் களம் அமைப்பது, பழத்தைத் தூக்கியெறிந்துவிட்டுத் தோலை உண்பது போல! ●

# கல்யாணப் பரிசு

**ஜி. வில்சன்**

எங்கள் சமுத்ரா காலனியின் இரவு வாட்ச்மேனாக, கூர்க்கா லக்ஷ்மிகாந்த்தை நியமித்து ஐந்து வருடங்களாகின்றன. முத்தான குணம். இதுவரை ஒரு சின்ன பிரச்னைகூட வந்ததில்லை அவனால். இரவுக் காவல் மட்டுமல்லாமல், கடை கண்ணிக்குப் போய்வர, டெலிபோன், குடிநீர் பில் கட்ட என்று ஆயிரம் ஒத்தாசைகள் செய்வான். அவனுக்கு இன்று கல்யாணம். மதுரைக்குப் போயிருந்தபோது அங்கே ஒரு பெண்ணைக் காதலித்துவிட்டான். நீண்ட நெடிய பிரச்னைக்குப் பிறகு இன்று, வீட்டார் சம்மதத்துடன் மதுரையில் கல்யாணம். நாளை இங்கே வந்து டூட்டியில் சேர்வதாய்ச் சொல்லிச் சென்றான். புது மனைவியுடன் வருபவனுக்கு என்ன பரிசு கொடுப்பது என்று ஆளாளுக்கு யோசனை கூறினர்.

''குக்கர் கொடுக்கலாம்!''

''கேஸ் ஸ்டவ் கொடுக்கலாம்!''

''கிரைண்டர் கொடுக்கலாம்!''

''மிக்ஸி கொடுக்கலாம்!''

இலவசங்களை அள்ளிக் கொடுக்கும் முதல்வர் போல் ஆளாளுக்கு ஒவ்வொரு பரிசாகச் சொல்லிக்கொண்டிருக்க, காலனியின் மூத்த குடிமகள் பர்வதவர்த்தினி பாட்டி மட்டும் மௌனமாக அமர்ந்திருந்தார்.

''என்ன பாட்டி, வாயைத் திறக்காம இருக்கீங்க? நம்ம நைட் வாட்ச்மேனுக்கு என்ன பரிசு தரலாம்?'' என்று கேட்டாள் சரளா.

''தனிப்பட்ட முறைல ஆளாளுக்கு விருப்பப்பட்டதை, அவனுக்குப் பரிசாக் கொடுங்க. ஒட்டுமொத்த காலனி சார்பா, நான் ஒரு பரிசைத் தீர்மானிச்சிருக்கேன். சொல்லட்டுமா?''

''சொல்லுங்க, சொல்லுங்க!'' என்றனர் கோரஸாக.

''நாம வீட்டுக்கு ஒருத்தரா முறைவச்சு ராக்காவல் பார்த்துப்போம். புதுசா கல்யாணமானவனுக்கு சம்பளத்தோட ஒரு மாசம் லீவு (குறிப்பா, இரவுக்கு) கொடுப்போம். ஒரு மாசம் அவன் சந்தோஷமா இருக்கட்டும். பாவம் சின்னஞ்சிறுசுக. இதுதான் அந்த இளஞ் ஜோடிக்குத் தர்ற உயர்ந்த பரிசு. என்ன?''

''ஆஹா!'' என்று அனைவரும் ஏற்றுக் கொண்டனர்.

# வளைந்து கொடுத்த சுந்தர்!

ஜனரஞ்சக இயக்குநர் என்று மக்கள் மனத்தில் பெயரெடுத்தவர் ஷக்தி சிதம்பரம். நகைச்சுவையில் தனக்கென தனி முத்திரை பதித்தவர், தயாரிப்பிலும் கில்லி. சுந்தர்.சியை வைத்து அடுத்து 'சண்ட' என்கிற படத்தை இயக்கி வருபவர், நம்மிடம் அப்படம் குறித்து பேசினார்...

"மாமியாருக்கும் மருமகனுக்குமான ஈகோ போராட்டம்தான் கதை. மாமியாராக நதியா பட்டையைக் கிளப்பியிருக்கிறார். சுந்தர்.சி. பற்றிச் சொல்லவே வேண்டாம். தெனாவெட்டான கதாபாத்திரத்துக்குக் கச்சிதமாகப் பொருந்திப் பேசுகிறவர். இந்தப் படத்திலும் இதமாக நடித்திருக்கிறார். 'சண்ட' என்று தலைப்பு வைத்திருந்தாலும், சண்டை, சச்சரவின்றி எல்லோரும் அமைதியாக வாழ வேண்டுமென்பதுதான் படத்தின் மையக் கரு. நமீதா, ராகினி என்று இரண்டு கதாநாயகிகள். எந்தளவு துடிப்பான நடிப்பை வெளிப்படுத்த முடியுமோ, அந்தளவுக்கு இரண்டு பேரிடமும் வேலை வாங்கியிருக்கிறேன். நாட்டாமையாகவும் நாட்டாமையின் மகனாகவும் விவேக்குக்கு இரண்டு வேடங்கள்.

அதிகமாக எனது படங்களில் காமெடி இருக்கும். இதிலும் தேவையான அளவுக்கு நகைச்சுவையுடன், பொழுதுபோக்கு அம்சங்களும் கலந்தே இருக்கின்றன. நதியாவின் திறமையை வெளிக் கொணரும் விதமான பாத்திரப் படைப்பு இந்தப் படத்தின் ஹைலைட். சுந்தர்.சி.யும் அவரும் வரும் காட்சிகளில் அனல் பறக்கும் 'மாப்பிள்ளை' படத்தில் ரஜினி சாரும், ஸ்ரீவித்யாவும் எப்படி மோதிக்கொண்டார்களோ, அதைவிட அதிக கலாட்டா 'சண்ட'யில் உண்டு.

மக்களின் 'மாஸ்'தான் எப்பவுமே எனது ப்ளஸ். அதை எந்தவிதத்திலும் நான் இழக்க மாட்டேன். அவர்கள் என்ன விரும்புகிறார்களோ அதைத்தான் தர வேண்டுமென்பதில் உறுதியாக இருக்கிறேன். என் வளர்ச்சிக்கு இதுதான் அடிநாதமாக அமைந்திருக்கிறது. உணர்வு ரீதியாகவும் 'சண்ட' படம் உள்ளங்களின் ஆனந்தத் தொட்டிலாக நிச்சயம் அமையும்.

சுந்தர்.சி. ரெடியாக வந்தாலும், வழக்கமான விதத்தில் அவர் இருக்கமாட்டார். வளைந்து கொடுத்து நடிக்கும் அவரின் திறமையை, முழுமையாக நான் வளைத்துப் பிடித்துவிட்டேன். அதில் அவருக்கும் மகிழ்ச்சிதான்!

**ப**கவான் இராமகிருஷ்ணரைச் சந்திக்க ஒரு தாய் தம் மகனுடன் வந்திருந்தார். ''இவன் மிக அதிக மாகச் சர்க்கரை சாப்பிடுகிறான். கூடாது என்று அறிவுறுத்துங்கள்'' என்று இராமகிருஷ்ணரை வேண் டினார். இராமகிருஷ்ணரோ 'நாளை மீண்டும் வா' என்று அனுப்பினார். இதேபோல ஒரு வாரம் கழிந்தது. கடைசியில் இராமகிருஷ்ணர் பையனைப் பார்த்து, ''அதிகம் சர்க்கரை சாப் பிடுவது உடல் நலத்துக்குக் கேடு. எனவே, குறைத்துக் கொள்'' என்று உபதேசம் செய்தார். அந்தத் தாய், ''இதைச் சொல்லவா எங்களை ஒரு வாரம் அலைக்கழித்தீர்கள்?'' என்றார் கோபத்துடன். இராம கிருஷ்ணர் சிரித்துக்கொண்டே சொன்னார், ''அம்மா, நீங்கள் வந்து கேட்டபோது, நானும் அதிகமாக இனிப்புகள் சாப்பிட்டுக் கொண்டி ருந்தேன். அப்படி இருக்க, நான் எப்படி உபதேசம் செய்வது? இப்போது குறைத்துக்கொண் டேன்'' என்றார்.

**ம**காத்மா காந்தியிடம் ஒரு முறை ''மக்களுக்கு உங்கள் செய்தி என்ன?'' என்று கேட்டதற்கு, ''என் வாழ்க்கையே என் செய்தி'' என்று கூறினார். இன்று இருக்கும் தலைவர் களில் யார் தங்கள் வாழ்க் கையே செய்தி என்று இளைஞர் களுக்குக் கூறமுடியும்? கூறினால், அடுத்த தலைமுறை அதை ஏற்க முடியுமா? என்று யோசித்துப் பார்க்க வேண்டும். 'இந்தியா கிராமங் களில்தான் வாழ்கிறது' என்று சொன்ன தோடு நிற்காமல், தானும் ஓர் ஏழை கிராம விவசாயியைப் போல் நடை, உடை, பாவனைகளை மாற்றிக்கொண்டு, ஒரு வறுமையான குடியானவனைப் போல் தான் அவர் வாழ்ந்தார். எளிமையை 'விரும்பி ஏற்றுக்கொண்ட வறுமை'யில் வாழ்ந்த காந்தியின் படத்தைத்தான், இன்னும் நம் நாடு அச்சிடும் அத்தனை ரூபாய் நோட்டுக்களிலும் பார்க்கிறோம்!

"**ப**சித்தவருக்குக் கடவுள் ரொட்டி வடிவில்தான் வருகிறார். ஒரு நாய் பட்டினி கிடந்தால்கூட அத்தனை கடவுள்களுக்கும் அத்தனை மதங்களுக்கும் அர்த்தம் இல்லை'' என்று கூறும் சுவாமி விவே கானந்தர், பசிப்பிணி போக்குவதற்காய்ச் சேவை செய்யவும், அந்தச் சேவையை ஓர் இயக்கம் மூலம் செய்யவும் முற்பட்டார். தம்முடன் இருக்கும் துறவிகளோடு இயக்க மாக இணைந்து, அதனுடன் சேர்ந்து மக்க ளையும் அரவணைத்துக்கொண்டு, அத் தனை பேரையும் சேவையில் ஈடுபடுத்த எண்ணினார்.

உடனே வந்தது எதிர்ப்பு. ''உலகே மாயம்; பசியும் மாயம்; பிணியும் மாயம்; இதைப் போக்க நாம் யார்? அவரவர்



**காந்திஜி, பாரதியார் விவேகானந்தர் இவர்களுடைய வாழ்க்கையில், இன்றைய இளைஞர்கள் கற்றுக்கொள்ள வேண்டிய தலைமைப் பண்புகள் ஏராளமாய்க் கொட்டிக் கிடக்கின்றன.**

சேவையா முரளிதரன்



# சொல்லின் மகத்துவம்!

விதிப்படி கஷ்டப்படுகிறார்கள். நம் கடமை நம் முக்தியை நாடுவதே'' என்று கூட இருந்த துறவிகள் குரல் கொடுத்தார்கள். சேவை செய்வது துறவிகள் செயல் அல்ல என்று வாதிட்டார்கள். விடுவாரா விவேகானந்தர்? ''அப்படியெனில் உங்கள் முக்தியும் மாயை தான்'' என்று பதில் கொடுத்தார்.

துறவிகள், ஓர் அமைப்பாய்ச் செயல்படுவது இதற்கு முன் நடந்தது இல்லை. எல்லாம் துறந்தபின் அமைப்பு மட்டும் எதற்கு? என்றெல்லாம், கூட இருந்த முக்கிய துறவிகளே வாதம் செய்தாலும், அவர்கள் எல்லோரையும் தம் திறமையான வாதங்களால் வென்று, இறுதியில் இராமகிருஷ்ணர் பெயரில், சேவைக்காக ஒரு மடம் துவங்கிவிட்டார்.

'**சா**திகள் இல்லையடி பாப்பா' என்று பாடிய பாரதி தனது வாழ்நாளில் எந்தவித சாதிய எண்ணமும் இல்லாமல் வாழ்ந்து காட்டினார். ஒரு தாழ்த்தப்பட்ட இளைஞனுக்குப் பூணூல் அணிவித்ததும், தன் அக்கிரஹாரத்துக்குள் பல சாதியினரை அழைத்து வந்ததும் அதன் காரணமாகச்



சாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டதும், அனைவரும் சமம் என்று மீண்டும் மீண்டும் பேசியும் செய்துகாட்டியதும் பாரதி வாழ்வில் நடந்த விஷயங்கள்.

*சூத்திரனுக் கொருநீதி - தண்டச்*
*சோறுண்ணும் பார்ப்பனுக்கு வேறொருநீதி என*
*சாத்திரம் சொல்லிடு மாயின் - அது*
*சாத்திரமன்று சதியென்று கண்டோம்.*

என்று சமநீதி வழங்காத சாத்திரத்தையே சதி என்று தூக்கி எறிகிறார் பாரதி. நூறு ஆண்டுகளுக்கு முன்னால் இப்படிப் பேசவும் செயல்படவும் 'அச்சம் தவிர்த்தால்'தான் முடியும்.

இன்று தலைமைப் பண்புகளைப் பற்றி பல புத்தகங்கள் வெளிவந்துவிட்டன. பல நட்சத்திர ஹோட்டல்களில், இரண்டு அல்லது மூன்று நாட்கள், தலைமைப் பண்பு பற்றிய கருத்தரங்கங்கள் நடைபெறுகின்றன. இந்தப் புத்தகங்களை எழுதியவர்கள் அல்லது கருத்தரங்கங்களில் பேசுபவர்கள் உலகப் புகழ்பெற்ற தலைவர்களா என்பது கேள்விக்குரியதே. ஆனால், தாங்கள் தலைமைப் பண்புகளைப் பற்றிப் பேசுகிறோம் என்ற எண்ணமே இல்லாமல், 'சேவகனுக்கு சேவகனாய்' தங்களை அறிவித்துக் கொண்டவர்கள் மகாகவி பாரதியும், மகாத்மா காந்தியும், சுவாமி விவேகானந்தரும்.

இவர்கள் சொன்னதைவிட செய்து காட்டிய, நடைமுறைப்படுத்திய தலைமைப் பண்புகள் ஏராளம். இவர்கள் வாழ்க்கையில் இன்றைய இளைய தலைமுறை தெரிந்து கொள்ள வேண்டிய ஆளுமைப் பண்புகள், தலைமைப் பண்புகள் கொட்டிக்கிடக்கின்றன. முழுமையாக இவர்களின் வாழ்க்கையைப் பற்றிப் படித்து, நாம் 'கற்றது ஒழுகினால்' வையத் தலைமை கொள்ளல் சாத்தியமாகும்.

**(நிறைந்தது)**

"உன் ஃப்ரெண்ட் மஞ்சியைக் காதலிச்சானே இப்ப என்ன பண்றான்?"

"காதல் தோல்வியில பின்னியும் கையுமா அலையறான்"

**இடி...**



**...சிரிப்ஸ்**

"காதல் படத்தைப் பார்த்துட்டு கிழவியை ஃப்ரிஜ்ஜுக்குள்ள வெச்சாயாமே ஏன்?"

"நாளைக்கு ஜில்லுன்னு ஒரு காதல் படம் பார்க்கலாமுன்னுதான்"

# தாயின் தவிப்பு!

## 9

### வாரம் ஒரு பாசுரம்

### பாகம் – 2

திருவாய்மொழியில், ஒரு தாய் தன் மகளைப் பற்றிக் கவலைப்படுவதாக, சில சுவையான பாடல்களை நம்மாழ்வார் இயற்றியிருக்கிறார்.

இந்தப் பெண்ணை என்ன செய்வதென்று தெரியவில்லையென, தாய் ஆதங்கப்படுகிறாள். ராஜாக்களைப் பார்த்தால், பெருமாளைப் பார்த்தேன் என்கிறாள்; எந்தச் சித்திரத்தைப் பார்த்தாலும் பெருமாள் படம் என்கிறாள்; எந்தக் கோயிலைப் பார்த்தாலும் பெருமாள் கோயில் என்கிறாள்; பயமோ சந்தோஷமோ எப்போதும் ஓயாமல் கண்ணனின் பாதங்களையே விரும்புகிறாள்.

பாடலைப் பார்க்கலாம்.

*"திரு உடை மன்னரைக் காணில்,*
*திருமாலைக் கண்டேனே என்னும்,*
*உருவுடை வண்ணங்கள் காணில்,*
*உலகளந்தான் என்று துள்ளும்;*
*கருவுடைத் தேவு இல்கள் எல்லாம்*
*கடல் வண்ணன் கோயிலே என்னும்;*
*வெருவிலும் வீழ்விலும் ஓவாள்;*
*கண்ணன் கழல்கள் விரும்புமே"*

(திருவுடை - செல்வந்தரான; உருவுடை வண்ணங்கள் - நல்ல வர்ணமயமான சித்திரங்கள்; உலகளந்தான் - உலகத்தை அளந்த வாமனன்; கருவுடைத் தேவு இல்கள் - கர்ப்பக் கிரஹங்களில் உள்ள தெய்வங்கள்; வெருவிலும் வீழ்விலும் அஞ்சியபோதும், யோகித்தபோதும்)

பெண்கள் காதல் வசப்பட்டால் பெற்றோருக்கு எப்போதும் கவலைதான். அது மனிதக் காதலோ தெய்வக் காதலோ... எதுவாயினும். இந்தப் பெண் 'கரும் பெரும் மேகங்கள் காணில் கண்ணன் என்று' தாவி ஏறிக்கொள்ளத் தவிப்பாளாம். அந்தத் தாயால், இவளை என்ன செய்ய முடியும்? பாவம் அந்தத் தாய்!

(படிக்கலாம்)




கரும்பலகையில் ஆங்கில இலக்கணம் எழுதிவிட்டு குணசேகர் திரும்பிய போது, மூன்றாவது பெஞ்சில் அமர்ந்திருந்த முத்துராஜ் எதையோ அவன் டெஸ்கினுள் மறைத்ததைக் கவனித்தார்.

மேஜைகளுக்கிடையே மெதுவாக நடந்தவர், முத்துராஜ் அமர்ந்திருந்த சேர் அருகே வந்தபோது, பட்டென டெஸ்கினுள் கை விட்டார். ஒரு பேப்பர் அகப்பட... எடுத்தார்.

சில வரிகள் படித்ததுமே அது ஒரு காதல் கடிதம் என்று அவருக்குப் புரிந்தது. கீழே சுந்தரி என்று பெயர் இருந்தது. எட்டாவது படிக்கிற மாணவனுக்கு லவ் லெட்டர்!

''என்னடா இது?'' குணசேகர் முத்துராஜ் அருகில் சென்று சிடுசிடுக்க... ''நான் மட்டுமா வச்சிருக்கேன். கர்ல்ஸ் டெஸ்குல பாருங்க சார்... எத்தினி இருக்குன்னு...'' என்றான்.

வகுப்பறைக்குள் என்ன நடக்கிறது?

பீரியட் முடிந்தவுடன் குணசேகர், தலைமையாசிரியர் அறை நோக்கி நடந்தார்.

சட்டைப் பைக்குள் இருந்த கடிதத்தை எடுத்து நீட்டினார். படித்ததும் முகத்தில் வியப்புக் காட்டிய தலைமையாசிரியர், ''எட்டாவது ஸ்டூடண்டுக்கு லவ் லெட்டரா?'' என்றார். பிறகு, ''எய்ட்த், நைன்த், டென்த் பசங்களோட புத்தகப் பையையும் சர்ப்ரைஸா ஒரு செக் பண்ணிடலாம்...'' என்றவர் தமக்கு எதிரே இருந்த மைக்கை உயிர்ப்பித்தார்.

ஒரு முக்கிய தகவல் இருப்பதால், எய்ட்த், நைன்த், டென்த் படிக்கும் மாணவர்கள் அனைவரும் கிரவுண்டுக்கு வருமாறு கேட்டுக் கொண்டார்.

மாணவர்கள் சத்தமிட்டபடி கிரவுண்ட் நோக்கி நகர..

ஆசிரியர்களும், பள்ளி அலுவலர்களும் வகுப்பறைக்குள் நுழைந்து புத்தகம் புத்தகமாய்ச் சோதனை செய்தவர்கள், அதிர்ந்தார்கள்!

தமது மேஜை மேல் காதல் கடிதங்கள், ஆபாசப்

**திருவாரூர் பாபு**

புத்தகங்கள், ஆபாச சி.டி.க்களைப் பார்த்த ராஜன் வருத்தக் குரலோடு பேசினார்.

''நம்ம பசங்க ஸ்டேட் லெவல்ல முதல்ல வரணும்னு, விடுமுறை நாட்கள்ல கூட ட்யூஷன் எடுத்துப் போராடிக்கிட்டு இருக்கோம். ஆனா, அவங்க புத்தகப் பைக்குள்ள ஆபாசப் புத்தகங்கள்! எங்க போய்க்கிட்டிருக்கு ஸ்கூல்..?''

''சார், இத விடக்கூடாது சார். இதுல சம்பந்தப்பட்ட அத்தனை பேரையும் தயவு தாட்சண்யமே இல்லாம டிஸ்மிஸ் பண்ணணும்..'' மதியழகன் கோபமாகப் பேச,

# எட்டாம் வகுப்பில் ஒரு 'காதல்' கடிதம்!

ராஜன் மெலிதாகச் சிரித்தார்.

''நோ... இதைக் காரணமா வைச்சு ஸ்டூடண்ட்ஸ் மேல நடவடிக்கை எடுத்தா, அவங்கள நாமளே காட்டிக் கொடுத்த, மாதிரி ஆயிரும். நாம் கொடுக்கற பனிஷ்மெண்ட்டை ஸ்டூடண்ட்ஸ் எப்படி எடுத்துப்பாங்கன்னு தெரியல... ஏதும் விபரீதம் ஆயிடக்கூடாது. பொறுப்புணர்வோட செயல்பட வேண்டிய சூழ்நிலை இது..''

''நீங்க சொல்றது கரெக்ட் சார். பெற்றோர் ஆசிரியர் கழக கூட்டத்தைக் கூட்டலாம். என்ன பண்ணலாம்னு ஆலோசிப்போம். அதுவரைக்கும் இந்த விஷயம் பத்தி யார்கிட்டயும் யாரும் பேச வேண்டாம்.''

ராஜன் அதை ஆமோதித்தார்.

பெற்றோர் ஆசிரியர் கூட்டம். தலைமையாசிரியர் வார்த்தைகளைக் கோத்தெடுத்துப் பேசினார்.

''தம்தம் பிள்ளைகளின் படிப்புக்காகவும் எதிர்காலத்துக்காகவும் பெற்றோர் படுகின்ற கஷ்டங்களை, மாணவர்களுக்கு எப்படி உணர்த்தப்போகிறோம் என்பதை விவாதிக்கும் கூட்டம் இது'' என்றார்

பெற்றோர் கவலையோடு பேசினார்கள். ஆலோசனை தெரிவித்தார்கள்.

''அந்த மாணவர்கள் யார் என்பதைச் சொல்லுங்கள்...?''

ஆவேசமாகக் கேட்ட ஒரு தந்தையைப் பார்த்துச் சிரித்தார் ராஜன்.

''கிட்டத்தட்ட நாற்பது பேர். இதில் எட்டு மாணவிகளும் அடக்கம். இவர்கள் பெயரைச் சொன்னால், இவர்களோடு சேரக்கூடாது என்று மற்ற மாணவர்களின் பெற்றோர்கள் தடை போடுவீர்கள். இது அந்த மாணவர்களின் மனநிலையைப் பாதிக்கும். எனவே, பெயர் வேண்டாம்.''

கூட்டத்தில் சலசலப்பு எழுந்தது.

ஆசிரியர் ஒருவர் எழுந்தார்.

''எனக்கென்னவோ கடுமையான தண்டனை மட்டுமே இதற்குத் தீர்வு என்று படுகிறது'' என்றார்.

மாணவர்களைக் கடுமையாகத் தண்டித்தே பழக்கப்பட்ட ஆசிரியர் அவர்.

ராஜன் முகத்தில் கடுமை ஏறியது.

''எனது முப்பத்தெட்டு வருட அனுபவத்தில், மாணவர்களின் உளவியல் நன்றாகத் தெரியும். இப்படியான தண்டனை அவனை மேலும் கெட்ட பழக்கங்களை நாடத்தூண்டுமே தவிர திருத்த உதவாது.''

''பிறகு என்னதான் செய்வது?'' என்றார்



அந்த ஆசிரியர் சற்றுக் கடுமையுடன்.

''காந்தி வழிதான்...'' சிரித்த ராஜன். அந்த வழியை சொல்லத் தொடங்கினார்.

அடுத்த நாள்...

காலையில் பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்த மாணவ மாணவிகளுக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

மைதானத்தில்...

''மாணவர்கள் நல்லொழுக்க மீட்டெடுப்பு போராட்டம்.''

பேனர் கட்டப்பட்டிருக்க, பெற்றோர்களும் ஆசிரியர்களும் தலைமையாசிரியர் ராஜன் தலைமையில் உண்ணாவிரதப் போராட்டத்தைத் துவக்கியிருந்தார்கள்.

அத்தனை ஆசிரியர்களும், பெற்றோர்களும் கொளுத்தும் வெயிலில் தங்களது பிள்ளைகளின் எதிர்காலம் கருதி, அமைதியாகத் தவமிருந்தார்கள்.

தங்களை அழைப்பார்கள்; கண்டிப்பார்கள். அல்லது அடிப்பார்கள். இதுதான் தவறிழைத்த மாணவர்கள் எதிர்பார்த்திருந்தது. அதற்கு நேர் எதிராக நடக்கும் இந்த உண்ணாவிரதப் போராட்டத்தை அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

நேரம் நகர... நகர...

இரண்டு அப்பாக்கள் மயக்கத்தில் சாய்ந்தார்கள்.

''ஏய்... சுந்தர், உங்கப்பா மயக்கமாயிட்டாருடா... ஏய் ராகவ், உன் அப்பாவும்தாண்டா...''

சுந்தர் மற்றும் ராகவன் இருவரும் கூட்டத்தில் புகுந்து ஓடினார்கள்.

''அப்பா... அப்பா... வெளியே வாப்பா...'' கதறினார்கள்.

கூட்டத்தில் வைத்தே டாக்டர்கள் சிகிச்சை அளித்தார்கள்.

நேரம் நகர... நகர... கொளுத்தும் வெயிலில் மயக்க எண்ணிக்கை அதிகமானது.

**அத்தனை ஆசிரியர்களும், பெற்றோர்களும் கொளுத்தும் வெயிலில், தங்களது பிள்ளைகளின் எதிர்காலம் கருதி அமைதியாகத் தவமிருந்தார்கள்.**

ஒரு தகப்பனுக்கு ஃபிட்ஸ் வந்தது. ஒரு தாய் மயக்கத்தில் கீழே சரிந்தாள். டாக்டர்கள் கேட்டும்கூட அவள் அங்கிருந்து நகர மறுத்தாள்.

''அய்யய்யோ.. எங்கப்பாவுக்கு ரத்தக் கொதிப்பு இருக்குடா... ஹார்ட் ப்ராப்ளம் வேற.. அவரு இப்படி வெயில்ல...''

ஒரு மாணவன் கண்கலங்கினான்.

மாணவர்கள் உள்ளுக்குள் புழுங்கினார்கள்; வேதனைப்பட்டார்கள்; அழுதார்கள். குற்ற உணர்ச்சியால் தவித்தார்கள்.

பிள்ளைகள் மனசு இளகுவதை பெற்றோர்களும் உணர்ந்தார்கள்.

''நீங்க எல்லாரும் ஒண்ண மறந்துட்டீங்க. நாங்க படற கஷ்டம் எல்லாம் உங்களுக்காகத்தான். நீங்க செலவுக்குப் பணம் கேக்கறப்ப யோசிக்காம கொடுக்கிறோம். நீங்க எங்க போறீங்க... எப்ப வர்றீங்கன்னு காவல் காத்து தொந்தரவு செய்யறது இல்ல. ஏன்னா உங்க மேல எங்களுக்கு இருக்கற நம்பிக்கை. ஆனா, அந்த நம்பிக்கைக்கு வேட்டு வைக்கற செயலத்தான் நீங்க செஞ்சிருக்கீங்க.

எங்களோட தேவைகளைப் பின்

தள்ளிடறோம். உங்கள டாக்டருக்கும் இன்ஜினியருக்கும் படிக்க வைக்கப் பணம் சேமிக்கிறோம். கஷ்டப்படறோம். ஆனா நீங்க? தப்பான, வேற முடிவெடுக்கிறீங்க. இந்த விஞ்ஞான வளர்ச்சியில தப்பு செய்ய உங்களுக்கு நிறைய வாய்ப்பு இருக்கு. அதைத் தேடி நீங்க போறப்ப எல்லாம் இந்தப் போராட்டம் உங்களுக்கு நினைவுக்கு வரணும்.




இன்னைக்கு நாங்கல்லாம் இந்த உயர்ந்த நிலையில் இருக்கோம்னா அதுக்கு காரணம், நாங்க கடைப்பிடிச்ச மனகட்டுப்பாடுதான். அந்தக் கட்டுப்பாடோட அவசியத்தையும் அருமையையும் நீங்க புரிஞ்சக்கறத்துக்காகத்தான் இன்னிக்கு இந்தப் போராட்டம். இப்ப இருக்கற வசதியெல்லாம் அந்த காலத்துல கிடையாது. இங்க இருக்கற பெற்றோர்களோட அப்பா அம்மாக்கள் ஒரு வேளை சோத்துக்குக் கஷ்டப்பட்டவங்க. அதையெல்லாம் யாரும் உங்ககிட்ட சொன்னது கூட கிடையாது. இப்ப சொல்லியாக வேண்டிய நிர்ப்பந்தம். நாங்க அந்த நிலைமைய உங்களுக்குக் கொடுத்திருக்கோமா?''

நீ ரசிக்கும் வேளை
இளைக்கும் இசைநீளம்
கண்டுபிடித்துக்
கொண்டிருந்தாய்
செவிச்சுவர் வேளை
புலம்பிக் கொண்டிருக்கின்றன
நிழலோடும் நினைவோடும்—

-அருண்பாரதி




மாணவர்களிடையே பெரும் அமைதி நிலவியது.

''பிள்ளைகளோட நடவடிக்கைகள் எப்படி பெற்றோர்களைப் பாதிக்கும்னு இப்ப உங்களுக்குத் தெரியாது. உங்களோட பிள்ளைகள் ஸ்கூலுக்குப் போறப்பதான் அத நீங்க உணர்வீங்க. யோசனை பண்ணுங்க. இது ஒரு அடையாள போராட்டம்ங்கிறதை உங்களுக்குச் சொல்லிக்கிறோம்.''

பெற்றோர் ஆசிரியர் கழகத் தலைவர் உணர்ச்சிகரமாகப் பேசி முடித்தார்.

மாணவர்கள் கூட்டம் கண்ணீரோடு கேட்டுக் கொண்டிருந்தது. ஒவ்வொருவர் மனசுக்குள்ளும் சத்தமில்லாமல் ஒரு மாற்றம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அந்த மாற்றத்தின் விளைவு செயலிலும் பிரதிபலிக்கும் என்று நம்பிக்கை தெரிகிறது. சூரியன் ஆரஞ்சு நிறத்தில் மேற்கே மறைந்துகொண்டிருந்தான். ●




# ஜோடி ஒண்ணு; கல்யாணம் ரெண்டு!

ஒரே ஜோடிதான். ஆனால், அடுத் தடுத்த நாட்களென இரண்டு முறை திரு மணம் நடந்திருக்கிறது திருச்சி உறையூரைச் சேர்ந்த சந்திரசேகர் - சங்கீதா காதல் தம்பதிக்கு. அந்த அனுபவத்தை அவர்களே சொல்கிறார்கள்...

**சந்திரசேகர் :**

"உயிர் பிழைத்தால் போதும். யுத்த பூமியான வவுனியாவிலிருந்து ராமேஸ்வரம் வந்திறங்கியது எங்கள் குடும்பம். அப்போது நான் பதினொரு வயதுச் சிறுவன். குடும்பத்தில் வறுமை. எப்படியோ பத்தாம் வகுப்பு தேர்ச்சிபெற்று திருவெறும்பூர் ஐ.டி.ஐ.-ல் ஃபிட்டர் கோர்ஸ் பயின்றேன். என் படிப்புக்குச் சம்பந்தமே இல்லாமல், 1991-ல் ஐஸ் கம்பெனியொன்றில் கேஷியர் வேலைக்குச் சேர்ந்தேன். ஐஸ் கம்பெனிக்கு எதிர்வீட்டுப் பெண் சங்கீதா!''

**சங்கீதா :**

"நான் அப்போது கல்லூரிக்குள் அடியெடுத்து வைத்திருந்த நாட்கள். இவர் எழுதி வெளிவந்த கவிதைகள் என்னோட மனசுக்குள் அடியெடுத்து வைத்தன. பிறகென்ன? எங்கள் கண்கள் பார்வை மொழியில் கவிதைகளைப் பரிமாறிக்கொள்ள, மனசுக்குள் காதல் வளர்த்தோம், யாருக்கும் தெரியாமல். என் அப்பா போலீஸ்காரர் ஆயிற்றே!

ஐஸ் கம்பெனியில் இரண்டு வருடம் வேலை பார்த்த இவர், பின்னர் வேறு வேலை தேடிச் சென்றுவிட்டார். ஆனாலும், எங்கள் காதல் இருவர் நெஞ்சுக்குள்ளும் கூடு கட்டிக் குடும்பம் நடத்தத் துவங்கிவிட்டது!''

**சந்திரசேகர் :**

"அறிவியல் உபகரணப் பொருட்கள் விற்பனை முகவர் வேலைக்கு வந்துவிட்டேன். தினசரி சந்தித்த எங்கள் பார்வைக்கு, சற்று இடைவெளி ஏற்பட்டது. இருவராலுமே மனசளவில் அதனைத் தாங்கிக்கொள்ள இயலவில்லை. என் பெற்றோர்களிடம் எங்கள் காதலைத் தெரிவித்தேன். அவர்கள் சம்மதித்தனர்.

அப்போது சங்கீதா இளங்கலை படிப்பு முடித்து, அதே கல்லூரியில் ஒரு வருட



* இரண்டு முறை திருமணம் செய்த ஜோடி

கம்ப்யூட்டர் கோர்ஸுக்குச் சென்று வந்தாள். சங்கீதா வீட்டாருக்குத் தெரியாமல் திருமணத்துக்கு ஏற்பாடுகள் செய்தோம். அது வரையில், எங்கள் காதல் பற்றி சங்கீதா வீட்டில் எவருக்குமே தெரியாது. காலையில் கல்லூரிக்குக் கிளம்பி வந்த சங்கீதாவை, காரில் முசிறிக்கு அழைத்துச் சென்றோம். அங்கு கன்னிமாரம்மன் கோயில் சுவாமி சன்னதியில் என் பெற்றோர் முன்னிலையில் சங்கீதா கழுத்தில் மாலை மாற்றி, தாலி கட்டினேன்!''

**சங்கீதா :**

''அன்று மதியமே முசிறி சார்பதிவாளர் ஆபீஸில் எங்கள் திருமணத்தை சட்டப்படி பதிவு செய்தோம். இவற்றை விவரமாகக் குறிப்பிட்டு அதே நேரத்திலேயே, என் அப்பாவுக்கு அவசரத் தந்தி அனுப்பி வைத்தோம். எங்களைத் தேடி மறுநாள் காலை என் வீட்டார் அனைவரும் வந்துவிட்டனர். கடும் வாக்குவாதம் நிகழ்ந்தது. அக்கம் பக்கத்தார் வந்து ஒரு வழியாகப் பேசிச் சமாளித்து, சமாதானம் செய்துவைத்தனர்.

அப்படியிருந்தும் என் வீட்டாருக்கு மனசு ஆறவில்லை. வீட்டில் கடைசிப் பெண் நான். அம்மாவும் இல்லை. கடைக்குட்டி கல்யாணத்தை தம் கண் குளிரப் பார்க்கவில்லையே என்கிற ஆதங்கம் அவர்களுக்கு. அதனால், அவர்கள் ஒரு புதிய ஏற்பாடு செய்தார்கள். வெள்ளிக்கிழமை முசிறியில் மாப்பிள்ளை வீட்டார் சார்பாகக் கல்யாணம். ஒரு நாள் கழித்து ஞாயிற்றுக்கிழமை, திருவானைக்கோயில் அம்மன் சன்னதியில் பெண் வீட்டார் சார்பில் கல்யாணம். அதில் மணமக்கள் மாலை மாற்றிக்கொள்வதென முடிவு செய்யப்பட்டது. என் கணவர் வீட்டாரும் அதற்குச் சம்மதித்தார்கள்.

ஒரு நாள் இடைவெளியில் ஒரே ஜோடிக்கு இரண்டு முறை கல்யாணம் நடத்தி வைக்கப்பட்டது எங்களுக்காகத்தான் இருக்கும். திருமணமாகிப் பத்து ஆண்டுகள் ஆகின்றன. எட்டு வயதில் முகிலன் என்றொரு மகன் இருக்கிறான்.''

**கா**தல் என்றால் சும்மாவா!

– ஸ்ரீரங்கம்
திருநாவுக்கரசு

**இடி சிரிப்ஸ்**

''டார்லிங்! நாம எப்ப கல்யாணம் பண்ணிக்கலாம்?''

''வீட்டு வேலைகள் செய்ய இன்னொரு ஆளையா உங்களுக்கு!''

- வெ. ராம்குமார்





# பிப்ரவரி 14 - பாலியல்

**2001**-ல் இந்திய நாடாளுமன்றம் தீவிரவாதிகளால் தாக்கப்பட்டது நினைவிருக்கும். அந்த வழக்கில் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்டவர் முகமது அப்சல். தூக்குத்தண்டனை விதித்தால் என்ன செய்வார் குற்றவாளி? ஜனாதிபதிக்குக் கருணை மனு அனுப்புவார். அதைத்தான் அப்சலும் செய்தார். மனு ஜனாதிபதி மேஜையிலேயே உறங்கிக்கொண்டிருந்தது. இது பா.ஜ.க., சிவசேனா ஆகிய கட்சிகளுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது.

ஒரு கட்டத்தில் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசிய தாக்கரே, ஒட்டுமொத்த இந்தியாவே அதிர்ச்சியடையும் அளவுக்கு, அப்போதைய ஜனாதிபதி கலாமை தரக்குறைவாகத் தாக்கிப் பேசினார்.

'இப்போதெல்லாம் நமது ஜனாதிபதிக்கு, என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க முடிவதில்லை. ஏன் தெரியுமா? அவருடைய நீண்ட தலைமுடி, கண்களுக்கு முன்னால் விழுந்து எல்லாவற்றையும் மறைத்துவிடுகிறது.'

ஆனால், கலாம் அதற்கு எந்தவித எதிர்வினையையும் ஆற்றவில்லை; அமைதியாகவே இருந்தார். பிறகு பிரச்னை ஓய்ந்தது.

**தொ**ண்ணூறுகளின் இறுதியில் வெளியாகி, பெயருக்குத் தகுந்தவாறே சர்ச்சைகளைப் பற்றவைத்த படம் 'ஃபயர்'. தீபா மேத்தாவின் இயக்கத்தில் ஷபனா ஆஸ்மி, நந்திதா தாஸ் இருவரும் நடித்திருந்தனர். இரு பெண்களின் பாலியல் தொடர்புகளைப் பற்றிய படம் என்பதால், நாடு முழுக்க பலத்த எதிர்ப்புகள். குறிப்பாக, மகாராஷ்ட்ராவில்.

'இந்தியக் கலாசாரத்துக்கு முற்றிலும் எதிரான படத்தைத் திரையிட அனுமதிக்க மாட்டோம்' என்று போராட்டத்தில் குதித்தனர் சிவசேனையினர். இதன் பின்னணியில் தாக்கரேவின் கண்ணசைவுகள் இருந்தன. சிவசேனாவின் மகளிர் அணியினர் தீப்பந்தம் ஏந்தி, திரையரங்குகளில் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

'ஃபயர்' தொடர்பாக இரண்டு கேள்விகளை எழுப்பினார் தாக்கரே.

1. படத்தில் வரும் இரண்டு பெண்களுக்கும், இந்து தெய்வங்களான ராதா, சீதாவின் பெயர்களைச் சூட்டியது ஏன்?

2. சாய்ரா, நஜ்மா என்று பெயர் வைத்து, அவர்களை முஸ்லிம் குடும்பமாகச் சித்தரிப்பதில் என்ன தயக்கம்?

'ஃபயர்' படத்தை மீண்டும் தணிக்கை செய்யவேண்டும். இல்லாவிட்டால், படம் பெட்டியிலேயே முடங்கிக் கிடக்கும் என்று மிரட்டினர் சிவசேனைகள். படம் ஓடிய தியேட்டர்கள் நொறுங்கின; திரைகள் கிழிக்கப்பட்டன. ஒரு கட்டத்தில் சிவசேனையினர் வெறும் உள்ளாடையுடன் நின்று போராட்டத்தில் ஈடுபட்டனர்! 'இரு பெண் கதாபாத்திரங்களின் பெயர்களையும் முஸ்லிம் பெயர்களாக மாற்றுங்கள். கலவரங்கள் தானாக நிற்கும்' என்றார் தாக்கரே, கொஞ்சமும் அலட்டிக்கொள்ளாமல்!

'ஃபயர்' உருவாக்கிய புகைமூட்டம் அடங்குவதற்குள் போதும்போதுமென்றாகிவிட்டது. அதிலிருந்து எந்தச் சர்ச்சைக்குரிய

ஆர். முத்துக்குமார்

கலகம் பிறந்தது எனக்காக - 6

# தொழில் தினம்!

படமாக இருந்தாலும், 'தாக்கரேஜிக்குப் போட்டுக்காட்ட முடியுமா? இல்லன்னா படமே வேண்டாம்' என்று தயாரிப்பாளர்கள் சொல்லும் அளவுக்கு நிலைமை பலவீனமானது. மணிரத்னம் இயக்கிய 'பம்பாய்' திரைப்படம்கூட அவருக்குத் திரையிட்டுக்காட்டிய பிறகே வெளியே திரையிடப்பட்டது. ஏன்?

1992 டிசம்பர் 6 அன்று, பாபர் மசூதி இடிப்பைத் தொடர்ந்து மும்பையில் மிகப் பெரிய கலவரம் வெடித்தது நினைவிருக்கும். இது தொடர்பாக விசாரிக்க, அமைக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணா விசாரணை கமிஷனில், கலவரத்தின் காரணகர்த்தாக்கள் பட்டியலில், தாக்கரேவின் பெயரும் இடம்பெற்றிருந்தது.

அதை அப்படியே காட்சிப்படுத்தினால் படத்தைத் திரையிட முடியாதல்லவா. ஆகவே, தாக்கரேவுக்குத் திரையிட்டுக் காட்டியதாகச் செய்திகள் வெளியாயின. தாக்கரே பார்த்த பிறகே படம் வெளியானது.

ஒரு கட்டத்தில் எல்லாம் புளித்துப் போக, அடுத்து கவனத்தைக் கலைத்தது பிப்ரவரி 14. 'வேலன்டைன்ஸ் டே' என்று கொண்டாடப்படும் காதலர் தினம்.

இந்திய இளைஞர்கள் உற்சாகம் பொங்கக் கொண்டாடும் ஒரு விழா. அதுவும் கிறிஸ்தவர் ஒருவர் பெயரால் கொண்டாடப்படுவது தீராத ஆத்திரம் தாக்கரேவுக்கு. பேனாவை எடுத்தார், எழுதினார். எழுதியது அவருடைய பத்திரிகையான சாம்னாவில் தலையங்கமாகப் பிரசுரமானது.

'சிவசேனையினர் காதலர் தினம் என்கிற கலாசார சீர்கேட்டைத் தடுத்து நிறுத்துவார்கள். இவை வெளிநாட்டு நிறுவனங்களால் விளைந்த சீர்கேடுகள். ஒருவேளை நம் இளைஞர்கள் காதலர் தினத்தைக் கொண்டாடினால், சிவசேனைகள் அதை வெறுமனே பார்த்துக்கொண்டிருக்க மாட்டார்கள்.'

இதுபோதாதா சிவசேனைகளுக்கு? உற்சாகம் பொங்கக் களமிறங்கினர். காதலர் தின வாழ்த்து அட்டைகள் விற்கும் கடைகள் அடித்து நொறுக்கப்பட்டன; காதலர்கள் தாக்கப்பட்டனர். விஷயம் விபரீதமானதை அடுத்து, செய்தியாளர்கள் தாக்கரேவைச் சந்தித்தனர்.

'பெண்களைத் தாக்கக் கூடாது என்று தொண்டர்களை எச்சரித்திருந்தேனே?' அலட்சியமாகச் சொன்னார் தாக்கரே. தவிரவும், காதலர் தினத்தை 'பாலியல் தொழில் தினம்' என்று அறிவித்தது சிவசேனா. இன்னமும்கூட மும்பையில், பிப்ரவரி 14 திகிலுடனேயே கழிந்து கொண்டிருக்கிறது. அதுதான் தாக்கரே!


• தீபா மேத்தா

கையில் செங்கோலுக்குப் பதிலாக எழுதுகோலையே கொடுங்கோலாக்கி வைத்துக்கொண்டு, கருத்துகளுக்குப் பதிலாகத் தீர்ப்புகளை எழுதி வரும் அரசியல்வாதி!

(அடுத்த இதழில்... ஜெயலலிதா!)



''நேத்து, நான் கனவில் வந்ததுக்கு ஏண்டா பயப்படற?''

''இல்லை, கனவில் ஆயிரம் ரூபாய் கடன் கேட்டியே!''

– ஜி.ஹேமலதா



''அய்யோ, கமலா வர்றா... பார்த்தா பேசியே கொன்னுடுவா!''

''அப்படியா... இந்த கமலாவை எப்படியாவது என் மாமியார்கிட்ட அனுப்பி வைக்கணும்!''

– அவ்வை கே.சஞ்சீவிபாரதி



''ஏண்டி, பாட்டின்னு முழுசாக் கூப்பிடாம 'பாட்'னு கூப்பிடுறே?''

''பெரியவங்களை மரியாதை இல்லாம 'டி' போட்டுக் கூப்பிடுறது தப்பு 'பாட்'?''

– கு.க.புரம் ச.ஆ.கேசவன்

''அந்த டாக்டர் எதையும் கொஞ்சம் கொஞ்சமாத்தான் குணப்படுத்துவார்...''

''அப்படியா?''

''ஆமாம், தூக்கம் வரலைன்னாகூட, முதல்ல கொட்டாவி வர்றதுக்குத்தான் மருந்து கொடுப்பார்.''

– மா.கண்ணன்






"ஏன் போலீஸ் ஸ்டேஷன்ல பூக்கடை ஆரம்பிச்சிருக்கீங்க?''

"திடீர்னு வர்ற காதல் ஜோடிகள், கல்யாணத்துக்குப் பூ மாலை வாங்கச் சிரமப்பட வேண்டாம் பாருங்க.''

- தேனி முருகேசன்

# போலீஸ் ஸ்டேஷனில் பூக்கடை!

"பல் வலின்னதும் டாக்டர் என் பல்லைப் பிடுங்கிட்டாரு''

"உங்களுக்கு நாக்கு வலி எப்ப வரும் அத்தே?''

- குருவை ஆர்.தேவிகா





"ப்ளீஸ்... ஒரு கேரி பேக் கொடுங்க... அஞ்சு மணி ட்ரெயினைப் பிடிக்கணும்!''

"ட்ரெயினைப் பிடிக்கிற அளவுக்கு நீளமான பை இல்லீங்க!''

- கோவில்பட்டி கேசவன்

**மா**டத்தி தனிக்கட்டை. அவளுண்டு அவள் குடிசையுண்டுன்னு இருப்பவள். அவளின் மகளொருத்தி மணலூரில் இருக்கிறாள். ஆனால், இருவருக்கும் போக்குவரத்து கிடையாது. அவள் பாட்டுக்கு, கூப்பிட்ட சம்சாரிகளுக்கு வேலைக்குப் போவாள். களை வெட்டுவதில் கை தேர்ந்தவள். வேலைக்குப் போகாத நாளே கிடையாது. ஆனாலும், அவளுக்குக் கொஞ்சம் வெவரம் பத்தாது. அதுல ஒண்ணுதான் உழக்கு அரிசி வெவகாரம்.

**சி**ன்னக் கணபதி நாயக்கர் புஞ்சைல, பருத்திக்குக் களை வெட்ட மாடத்தி போயிருக்கா. களை வெட்டும்போது பொம்பளைங்க ஊர் நியாயங்களைப் பேசிக்கிட்டே வெட்டுறது வழக்கம்தானே? அன்னைக்கு எல்லாருமாச் சேர்ந்து மாடத்தி வாயைப் புடுங்கிருக்காங்க. ஒருத்திய ஒருத்தி எசலிக்கிட்டு, இவள எடக்குப்



# மாடத்தி

பண்ணியிருக்காக. மத்தியானக் கஞ்சிக் குடிக்கும்போதும் இது நிக்கலை.

மாடத்தி பழைய சோறும் காணத் தொவையலும் வெச்சுக் கஞ்சிக் குடிச்சிருக்கா. தூக்குவாளி நிமிரச் சோறு, மூடியை மல்லாளிக்கு வச்சு, அதுல தொவையல ஒட்ட வெச்சிருக்கா. இவள் தூக்கு வாளி நிமிர சோறு வெச்சிருந்ததப் பார்த்ததும், சிங்கிலிப்பட்டிக்காரிக்குச் சந்தேகம் வந்திருச்சு. 'ஏய் கெழவி இவ்ளோ கஞ்சிக் கொண்டாந்திருக்கியே, அப்ப முன்னா எம்புட்டுத்தான் பொங்குன?' அப்பிடிங்கவும், மாடத்தி, 'அதாண்டி கேக்க, ரெண்டு உழக்கு நேத்து வெள்ளைங் காட்டி பொங்கி எறக்குனேன். நேத்து மூணு நேரமும் சாப்பிட்டுட்டு, சாயங்காலமும் காலையும் அண்டை அசலு பெண்களுக்கும் போட்டுட்டு மிச்சத்தத்தான் இப்ப திங்கேன்'னு சொல்லி இருக்கா.

இது இப்படிப் போகையிலே, ஒரு நாள் சிங்கிலிப்பட்டிக்காரிக்கு, சொக்கம்பட்டியில இருந்து அவ ஆத்தாக்காரி அவல் இடிச்சுக் குடுத்து விட்டிருக்கா. நல்லா நிமிர அவல் வந்திருக்கு. சொக்கம்பட்டிக்கு விருந்தாடிப் போன உடையம்மை மூலியமா அவல் வந்து சேர்ந்திருந்தது. சிங்கிலிபட்டிக்காரி அரிசி அவலை அளந்து பாக்கலாம்னு பக்காவைத் தேடியிருக்கா. அது எங்கன கெடக்குனு தெரியல. சரின்னு மாடத்திக்கிட்டப் போயி, 'உழக்கு இருந்தாக் குடு'னு கேட்க, அவளும் 'இந்தாட்டி'ன்னு தூக்கிக் குடுத்தது பக்காவை; சொன்னது உழக்குன்னு. அப்பத்தான் சிங்கிலிபட்டிக்காரிக்கு வெவரம் பிடிபட்டிருக்கு. மாடத்தி பக்காவை உழக்குன்னு நெனைச்சிட்டே இம்புட்டுக் காலமும் கழிச்சிருக்கா. ரெண்டு உழக்கு வேக வெச்சமின்ட்டு, ரெண்டு பக்கா வடிச்சு எறக்கிருக்கா!

இது மட்டுமில்ல. ஊர்ல பெரும் பிரச்னை வர்ற அளவுக்கு அவ ஒரு வேலை செஞ்சா.

சுத்தியும் பார்க்க வேண்டியது, ஒரு கல்லை எடுத்து கண்டமானிக்கு எங்குட்டாச்சும், ஒரு திசையைப் பார்த்து எறிய வேண்டியது. பிறகு ஒன்னுந்தெரியாத மானிக்கு அவ வேலையப் பார்க்க வேண்டியது.

திடீர் திடீர்னு ஓட்டுமேல கல்லு வந்து விழுது; கூரைகள்ல பொதுக்பொதுக்குன்னு கல்லு புதையுது; மண்பானைகள் உடையுது. பொம்பளைங்க பாத்தாக, ஒருத்திமேல ஒருத்தி சந்தேகப்பட்டு, தெருவுல நின்னு வசவாய்ப் பொழியுதாக. ஆம்பிளையாளுகளும் முக்குல கூடிக் கூடிப் பேசுதாங்க. யாருன்னு கண்டுபிடிக்க முடியலை.

மாடத்திக்கு ஒரு நோக்கமும் இல்ல. ஆனா, இப்படியே செஞ்சுக்கிட்டு வர்றா. இதுக்கு நடுவுல தங்கக்கிளி, பேச்சியம்மா கல்லக் கொண்டு எறியும்போது, 'நான் பாத்தே'ன்னு புறணி சொன்னா.

வரப்புப் பிரச்னை, மடைத் தண்ணிப் பிரச்னை, மருவாதி பிரச்னை எல்லாம் கல்லு வெவகாரத்துல சம்பந்தப்படுத்தி, ஊர்ல ஒரே சண்டைதான்.

சில நாள் கல்லே வராது. பிறவு திடீர்னு கல் மழை, பகல்லயே பொழியும்.

ஒரு சனிக்கிழமையில் பள்ளிக்கூடத்துப் பிள்ளைக 'கல்கம்பு' விளையாடிட்டு இருந்தன. பட்டு வர்றது பண்ணிவிட்டை. பட்டு வர்றதுன்னா, விளையாட்டில் மாட்டிக்கிட்டவன் கல்கம்பு ஆட்டையில் பட்டு வர்றவன், முதல்ல ஒரு வட்டம் இருக்கும். அதுக்குள்ள வரிச்சுக் கம்பு வெச்சுட்டு, ரெண்டு கையையும் உசத்திப் பிடிப்பான். அதைப் பின்னால் கூடி வந்து

வே. இராமசாமி

கெந்திவிடுவான் ஒருத்தன். எல்லாரு கையிலும் ஒரு பாகம் நீளத்துக்கு வரிச்சுக் கம்பு இருக்கும். கெந்திய கம்புக்கிட்ட பட்டு வர்றவன் நிப்பான். அதை மத்தவங்க கம்புட்டுக் கடத்திட்டு, தள்ளிட்டுப் போகணும். அப்படித் தள்ளும்போது பட்டவன் தொட்டா, தொட்ட ஆளு அவுட். பிறகு அவன் கம்பைக் கடத்திட்டுப் போவாங்க. வரிச்சிக் கம்பை ஏதாவது கல்லு மேல வைச்சுட்டு நின்னா தொடக் கூடாது. கல்லுமேல இல்லாதப்பத்தான் தொடணும். ஒருத்தனைத் தொட விரட்டும் போது, இன்னொருத்தன் கம்பைக் கெந்தி கடத்துவான். இப்படிச் சில சமயம் மைலுக் கணக்குல கடத்திட்டுப் போயிருவாங்க. பட்டவன் அங்கிருந்து நொண்டியடிச்சு நிக்காம வட்டம் இருக்க இடத்துக்கு வரணும்.

இந்தக் கல் கம்பாலதான் மாடத்தி பிடிபட்டா. எப்படின்னா, பிள்ளைக விளையாட்டுக்கு நடுவுல ஒரு கல் வந்து விழுது. எல்லாரும் விளையாட்ட நிப்பாட்டிட்டு, கல்லை எடுத்துப் பாக்காங்க. அப்பம்போது நாட்டாமை வடக்க இருந்து வர்றாரு. பெயக அவர்ட்ட கல்லக் குடுத்தாங்க. அவரு வாங்கிப் பாத்தவரு படக்குன்னு வேட்டிய மடிச்சுக் கட்டினாரு. ரெண்டு மூணு இளவட்டங்களைக் கூப்பிட்டு, ''ஏலேய், யாரு ஊருக்குள்ளே இந்த நேரம் சோளம் இடிக்கிறதுன்னு பாருங்கல''ன்னாரு. தெருவுக்கு ஒருத்தரா ஓடி ஓடிப் பாத்தாங்க.



**மாடத்தி, வயசாளி. ஒரு மாசம் உச்சி உடையாருக்கு, எண்ணெய் ஊத்தி விளக்கெரிக்கச் சொல்லித் தண்டிச்சாங்க.**

அங்க மாடத்தி, வீட்டுக்குப் பின்னால மொங்கு மொங்குன்னு சோளம் குத்திட்டிருக்கா. குமரிப்பிள்ளைகளே குத்துறதுக்கு முக்குற சோளத்தை, இவ கை மாத்தி கை மாத்திக் குத்திட்டிருக்கா. அவளை இழுத்து நாட்டாமை முன்னால கொண்டாந்து நிறுத்துனாங்க.

''பாதகத்தி, இத்தனை நாளும் நீதான் இந்த வேலையைச் செஞ்சியா''ன்னு கேட்டாரு. மாடத்தி, ''நான் இல்லவே இல்லை''ன்னா. ''பின்ன எப்படி கிழவி இந்தக் கல்லுல சோள மாவு ஒட்டியிருக்கு. வானத்துல இருந்த வந்துச்சா''ன்னாரு நாட்டாமை. விழுந்த கல்லுல இருந்த சோள மாவை வெச்சு, நாட்டாமை இதைக் கண்டுபிடிச்சிருக்காரு. மாடத்தி கெக்கபிக்கன்னு முனங்குனா... பிறவு என்ன? மாடத்தி வயசாளி. ஒரு மாசம் உச்சி உடையாருக்கு எண்ணெய் ஊத்தி விளக்கெரிக்கச் சொல்லித் தண்டிச்சாங்க.

*(நிறைந்தது)*

---

**...றல் கவிதை! தூறல் கவிதை! தூறல் க...**

முகை
மொக்கின்
நறுமணம்
திருடிச் செல்லும்
காற்றே
முள் வேலிப்
பூக்களையும் கொஞ்சம்
நனைத்துவிட்டுப் போ!

அறமுகம்...

அருள்வாக்கு

# மதம் என்னும் வைத்தியம்!



மதம் என்பது என்ன? ஆத்மாவுக்கு வந்திருக்கிற வியாதி தீருவதற்கு வைத்தியம் செய்வதுதான் மதம். ஒரு நோயாளிக்கு இன்ன வியாதி வந்திருக்கிறது. அது இன்ன மருந்தைத் தந்தால் குணமாகும் என்பது வைத்தியனுக்குத்தான் தெரியும். தங்களுக்கென்று ஒரு பொருளையும் தேடிக்கொள்ளாமல், பரமத் தியாகத்துடன் உலக நலனையே நினைத்த ரிஷிகள், தர்ம சாஸ்திரக்காரர்கள் அப்படித் தந்திருக்கிற மருந்துதான் நமது சநாதன தர்மம். மற்ற தேசங்களில் வேறு வைத்தியர்கள், வேறு மதங்களை மருந்தாகத் தந்திருக்கிறார்கள். நம் உடம்புக்கு மருந்து தருகிற டாக்டரிடம், அந்த டாக்டர் அப்படி டிரீட்மெண்ட் செய்கிறார், நீங்கள் இப்படிச் செய்கிறீர்களே என்றால், அவர் கேட்டுக் கொண்டிருப்பாரா? வைத்திய சாஸ்திரத்தில் பல தினுசுகள் உண்டு. ஒன்றில் கடும்பத்தியம் இருக்கும்; ஒன்று இலகுவாக இருக்கும். ஒன்றில் மருந்து கசக்கும்; இன்னொன்றில் தித்திக்கும். இதையெல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்று சொல்லாமல், அவரவரும் எந்த வைத்திய முறையை மேற்கொள்கிறார்களோ அதையே விடாமல் பின்பற்றினால், எந்த முறையிலும் குணம் அடையலாம்.

அகிம்சை, சத்தியம், தூய்மை, புலனடக்கம், தேவைக்கு அதிகமாக ஒரு துரும்பைக்கூடத் தனக்கென வைத்துக் கொள்ளாமலிருப்பது, தெய்வ பக்தி, மாதா பிதாவிடம் விசுவாசம், சகல ஜீவராசிகளிடத்திலும் சமமான அன்பு - இவை எல்லாம் எல்லாருக்கும் மதத்தில் விதிக்கப்பட்ட சாமான்ய தர்மங்கள் ஆகும்!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

**மேஷம்:** எண்ணங்கள் யாவும் நிறை வேறும். வாக்குவன்மை, கல்வி வளம் மேன்மை பெறும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுப காரியம் கைகூடும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். வழக்கு வெற்றி பெறும். வியாபாரத்தில் நல்ல ஆதாயம் கிடைக்கும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். புதிய வேலை வாய்ப்புகள் வந்து சேரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** வேலைப் பளு அதிகரிக்கும். கல்வியில் உயர்வு கிட்டும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. தடை, விலகி, திருமணம் கைகூடும். புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடவும். தாயின் உடல் நிலை சீராகும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர, நன்மை உண்டாகும்.

**மிதுனம்:** திருமண காரியம், நீண்ட நாள் பிரார்த்தனை நிறைவேறும். புண்ணிய ஸ்தலம் செல்ல நேரிடும். தூரதேச அழைப்பு வந்து சேரும். புத்திர பாக்கியம் உண்டாகும். சத்ரு தொல்லைகள் நீங்கும்.

காதல்ல இதாம்பா பெரிய தொல்லை. எது சொன்னாலும் சிரிச்சாகணும்?!



**10.2.2008 முதல் 16.2.2008 வரை**

பணக் கஷ்டம் இருக்காது. பரிகாரம் தேவையில்லை.

**கடகம்:** யாரிடமும் அதிகம் பேச்சு வைத்துக்கொள்ளக் கூடாது. சக நபர்களால் தொல்லைகள் ஏற்படலாம். கல்வியில் கவனம் தேவை. இல்லற வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. வாகனத்தில் செல்லும்போது உஷார். கைபொருள் மீது கவனம் தேவை. வியாபாரத்தில் ராகு / கேது / குரு / சனி வழிபட்டு வந்தால், நன்மை உண்டாகும்.

**சிம்மம்:** மனநிறைவான வாரம். தொட்டது துலங்கும். வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர் / உறவினர்கள் மூலம் ஆதாயம் உண்டு. தொலைதூரப் பிரயாணம் வந்து சேரும். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சி நடக்கும். புதிய தொழில் அபிவிருத்தி ஏற்படும். ராகு / கேது / சனி வழிபட்டு வர, நன்மை உண்டாகும்.

**கன்னி:** மன உளைச்சல் நீங்கும். வெளிநாட்டு அழைப்பு வந்துசேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வேலையில் முன்னேற்றம் ஏற்படும். சத்ரு தொல்லை நீங்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி நடக்கும். வழக்கு வெற்றி பெறும். புதிய முயற்சிகள் கைகூடும். குரு / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** குழந்தைகள் பற்றின மனக் கவலை தீரும். நெருங்கிய கூட்டாளிகளை விட்டுவிலக நேரிடும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். வீடு மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தீராத வழக்கு உடன் தீர்வு கிட்டும். ராகு/ கேது/ குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** லட்சியங்கள் ஈடேறும். பொருளாதார முன்னேற்றம் உண்டாகும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். திருமணக் காரியம் கைகூடும். வேலைப்பளு அதிகரிக்கும். தொழில் துறையில் புதிய சாதனை படைப்பீர்கள். ராகு/ கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** நீண்ட தூரப் பிரயாணம் தேடி வரும். சிலருக்கு மேல் நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். மகான்களின் தரிசனம் கிட்டும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் மன மகிழ்ச்சி கிட்டும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். உத்தியோகத்தில் நற்பெயர் உண்டாகும். குரு வழிபாடு செய்துவர, நற்பலன் கிடைக்கும்.

**மகரம்:** வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. புதிய முயற்சிகளைச் சற்றுத் தள்ளிப் போடவும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார். ராகு / கேது/ சனி / குரு ஆகிய கிரகங்களை அந்தந்த நாட்களில் வழிபட்டு வந்தால், கஷ்டங்கள் குறையும்.

**கும்பம்:** மதிப்பும் மரியாதையும் கூடி வரும். புதிய பொருட்சேர்க்கை ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல வருவாய் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** மனச் சஞ்சலம் தீரும். வழக்கு வெற்றி பெறும். பண வசதி பெருகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் இடமாற்றம் உண்டாகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் உண்டாகும். குரு வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**தஞ்சை பரத்வாஜ்**

# 20.பொன்னனும் சிவனடியாரும்

சிவனடியாரைப் பார்த்த பொன்னன் ஏன் அவ்வளவு ஆச்சரியமடைந்தான் என்று சொல்ல வேண்டியதில்லை. குதிரையிலிருந்து இறங்கி அந்தச் சிற்ப வீட்டுக்குள் நுழைந்தவர் ஒருவராயும், வெளியில் வந்தவர் இன்னொருவராயும் இருந்ததுதான் காரணம். இரண்டு பேரும் ஒருவர்தானா, வெவ்வேறு மனிதர்களா?

இந்த ஆச்சரியத்தையும் சந்தேகத்தையும் பொன்னன் முகத்தில் வெளிப்படுத்திய போதிலும், வார்த்தைகளினால் வெளியிடவில்லை. வெளியிடுவதற்கு அவனுக்குச் சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை. ஏனென்றால், அவனைப் பார்த்தவுடனேயே, சிவனடியார், "பொன்னா! எவ்வளவு சரியான சமயத்தில் வந்தாய்! இப்போதுதான் உன்னை நினைத்துக்கொண்டிருந்தேன். உறையூருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். இன்னும் சற்றுநேரம் கழித்து வந்திருந்தாயானால், என்னைப் பார்த்திருக்க மாட்டாய்..." என்று பரபரப்புடன் பேசிக்கொண்டே போனார். திண்ணையில் அவர்கள் உட்கார்ந்து கொண்டதும், "பொன்னா! சீக்கிரம் உன் சமாசாரத்தைச் சொல்லு! ரொம்ப முக்கியமான காரியம் ஏற்பட்டிருக்கிறது. அதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன். மகாராணியைப் பற்றி ஏதாவது தகவல் தெரிந்ததா?" என்று கேட்டார்.

பொன்னன், "தெரிந்தது, சுவாமி!" என்றான். பிறகு, தான் கொல்லிமலை அடிவாரத்துக்குப் போனது, அருவியைப் பிடித்துக்கொண்டு மேலேறியது, அங்கே ஒற்றைக் கை மனிதனும் குள்ளனும் வந்ததைக் கண்டு மறைந்திருந்தது, அவர்கள் திரும்பி வருவார்களென்று எதிர்பார்த்து, மூன்று நாட்கள் காத்திருந்துவிட்டுத் திரும்பியது ஆகிய விவரங்களைச் சொன்னான். காட்டாற்று வெள்ளத்திலிருந்து விக்கிரமனைக் காப்பாற்றியது முதலியவற்றைச் சொல்லவில்லை. சிவனடியாரைப் பற்றிய உண்மையைத் தெரிந்துகொண்டு, பிறகு சொல்லலாமென்று இருந்தான்.

ஒற்றைக் கை மனிதனுடைய தோற்றத்தைப் பற்றி விவரமாகச் சொல்லும்படி சிவனடியார் கேட்க, பொன்னன் அவ்விதமே அவனுடைய பயங்கரத் தோற்றத்தை வர்ணித்துவிட்டு, "சுவாமி! அந்த மனிதன் யார்? உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"பொன்னா! பார்த்திப மகாராஜாவின் பத்தினி அந்தக் கொல்லி மலையிலேதான் எங்கேயோ இருக்கிறாள்; சந்தேகமில்லை. இதுவரையில் எனக்கு அர்த்தமாகாத விஷயங்கள் பல இப்போது அர்த்தமாகின்றன. அந்த மனிதன் யார் என்றா கேட்கிறாய்? மகாபுருஷர்களும் பக்த சிரோமணிகளும் தோன்றிய இந்தப் புண்ணிய நாட்டில், நரபலி என்னும் பயங்கர வழக்கத்தைப் பரப்பி வரும் மகா கபால பைரவன்தான்

சிவனடியாரிடம், "ஆமாம். இன்னும் சில விவரங்கள் தெரியவேண்டும். முக்கியமாகத் தாங்கள் யார் என்று சொல்ல வேண்டும்" என்றான் பொன்னன்.

அவன். நானும் எவ்வளவோ முயற்சி செய்து வருகிறேன், அவனை நேருக்கு நேர் காண வேண்டுமென்று. இன்றுவரையில் முடியவில்லை. அவனைப் பற்றி இன்னொரு சந்தேகம் எனக்கிருக்கிறது பொன்னா! ஏன் என் கண்ணில் அகப்படாமல் அவன் தப்பித்திரிகிறான் என்பதை ஒருவாறு ஊகிக்கிறேன். எல்லா உண்மைகளையும் சீக்கிரத்தில் நாம் இரண்டு பேருமாகக் கண்டுபிடிக்கப் போகிறோம். பொன்னா! அதற்கு முன்னால் நமக்கு இன்னும் முக்கியமான காரியம் ஏற்பட்டிருக்கிறது. உனக்கு இப்போது ரொம்பவும் ஆச்சரியமளிக்கும் விஷயம் ஒன்றைச் சொல்லப் போகிறேன். சோழ நாட்டு இளவரசர் திரும்ப வந்திருக்கிறார்'' என்று சொல்லி சிவனடியார் பொன்னனுடைய முகத்தை உற்றுப் பார்த்தார்.

அவனுடைய முகத்தில் சிறிது வியப்புக்குறி காணப்பட்டதே தவிர, குதூகலமும் மகிழ்ச்சியும் தோன்றாதது கண்டு, சிவனடியார், ''என்ன பொன்னா, உனக்கு நான் சொல்வதில் நம்பிக்கை இல்லையா?'' என்று கேட்டார்.

பொன்னன் இன்னும் சிறிது ஜாக்கிரதையுடன், ''தங்களுடைய வார்த்தையில் எனக்கு

**அமரர் கல்கி**





அவநம்பிக்கை ஏற்படுமா, சுவாமி? ஆனால், இவ்வளவு அபாயத்துக்குத் துணிந்து இளவரசர் ஏன் வந்தார் என்றுதான் கவலையாயிருக்கிறது'' என்றான்.

''உண்மைதான் பொன்னா! இளவரசருக்கு ஏதோ அபாயம் நேர்ந்துவிட்டது. உறையூருக்குப் போகும் பாதையிலேதான் ஏதோ நேர்ந்திருக்கிறது. நாம் உடனே கிளம்பிப் போய்ப் பார்க்க வேண்டும். அருள்மொழிதேவியைக் கண்டுபிடிப்பதற்கு முன்னால் இளவரசரைக் கண்டுபிடிக்க வேண்டும்'' என்றார்.

பொன்னன் இப்போது உண்மையாகவே பேராச்சரியம் அடைந்தவனாய், ''சுவாமி! இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?

இளவரசரை நீங்கள் பார்த்ீர்களா? எங்கே பார்த்தீர்கள்? அவருக்கு வழியில் ஆபத்து என்று என்ன முகாந்திரத்தைக் கொண்டு சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

"பொன்னா! இதென்ன உன்னிடம் இந்த மாறுதல்! நான் சொல்வதில் சந்தேகப்பட்டு முகாந்திரம் கேட்கக்கூட ஆரம்பித்து விட்டாயே? நல்லது, சொல்கிறேன் கேள்! இளவரசரை நானே பார்த்தேன்; பேசினேன். நான்தான் உறையூருக்கும் அனுப்பினேன்...''

''எதற்காக சுவாமி?''

''எதற்காகவா? ஜன்மதேசத்தைப் பார்த்து விட்டு வரட்டும் என்றுதான். பொன்னா! ஒருவனுக்குத் தன்னுடைய பிறந்த நாட்டில் அன்பு எப்போது பூரணமாகும் என்று உனக்குத் தெரியுமா? கொஞ்ச காலமாவது அயல் தேசத்திலிருந்து விட்டுத் திரும்பி வரும்போதுதான். இரண்டு மூன்று வருஷம் அயல்நாட்டிலிருந்துவிட்டு, ஒருவன் திரும்பித் தன் தாய்நாட்டுக்கு வரும்போது, பாலைவனப் பிரதேசமாயிருந்தாலும் அது சொர்க்க பூமியாகத் தோன்றும். வளங் கொழிக்கும் சோழநாட்டைப் பற்றிக் கேட்க வேண்டுமா? உங்கள் இளவரசருக் குத் திரும்பவும் இந்நாட்டை விட்டுப் போகவே மனம் வராதபடி செய்யவேண்டு மென்று விரும்பினேன். பார்த்திப மகாராஜா வுக்குப் போர்க்களத்தில் நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றும் பொருட்டு. ஆனால், வழியில் இப்படி விபத்து ஏற்படக் கூடுமென்று எதிர்பார்க்கவில்லை. ஐயோ பகவானே! நாளை அருள்மொழி ராணி கேட்டால் நான் என்ன செய்வேன்...?''

''சுவாமி! இளவரசருக்கு என்ன ஆபத்து நேரிட்டது? அது எப்படி உங்களுக்குத் தெரியும்?'' என்று பொன்னன் கேட்டான்.

''இன்றைக்கு ரொம்பக் கேள்விகள் கேட்கிறாய், பொன்னா! என்ன ஆபத்து நேர்ந்தது என்று எனக்குத் தெரியாது. ஆனால், ஏதோ நேர்ந்து மட்டும் இருக்கிறது. அதோ அந்தக் குதிரைக்கு, பகவான் பேசும் சக்தியை மட்டும் அளித்திருந்தால், அது சொல்லும். ஆமாம், இந்தக் குதிரைமேல் ஏறிக்கொண்டுதான் உங்கள் இளவரசர் கிளம்பினார். இதே இடத்திலிருந்துதான் புறப்பட்டார். ஆனால், இரண்டு நாளைக்குப் பிறகு, குதிரை மட்டும் தனியாகத் திரும்பி வந்திருக்கிறது. இளவரசருக்கு எங்கே, என்ன நேர்ந்தது என்பதை நாம் இப்பொழுது உடனே போய்க் கண்டுபிடிக்க வேண்டும். நீயும் என்னோடு வருகிறா யல்லவா, பொன்னா! உனக்குக் குதிரை ஏறத் தெரியுமா?'' என்று சிவனடியார் கேட்டார்.



''தெரியும் சுவாமி! ஆனால், நான் தங்களுடன் வருவதற்கு முன்னால், தங்களிடம் இன்னும் சில விஷயங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்'' என்றான் பொன்னன்.

''என்ன?'' என்று சிவனடியார் தம் காதுகளையே நம்பாதவர்போல் கேட்டார்.

''ஆமாம், இன்னும் சில விவரங்கள் தெரியவேண்டும். முக்கியமாகத் தாங்கள் யார் என்று சொல்ல வேண்டும்'' என்றான்.

சிவனடியாரின் முகத்தில் புன்னகை அரும்பியது.

''ஓஹோ! அப்படியா?'' என்றார்.

''சற்று முன்னால் சாலையில் தாங்கள் குதிரை மீது வந்ததை நான் பார்த்தேன். அப்போது வேறு உருவம் கொண்டிருந் தீர்கள். இந்த வீட்டுக்குள்ளே போய் வெளியே வரும்போது வேறு ரூபத்தில் வந்தீர்கள். ஆனால், இந்த இரண்டு உருவமும் தங்களுடைய சொந்த உருவம்

அல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தச் சந்தேகம் எனக்கு வெகுநாளாகவே உண்டு சுவாமி. ஆனால், இப்போது கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. உண்மையில் தாங்கள் யார் என்று சொன்னால்...''

''சொன்னால் என்ன?''

''சுவாமி! மிகவும் முக்கியமான ஒரு விஷயம். தாங்கள் அறிந்துகொள்ள விரும்பக் கூடிய விஷயம் எனக்குத் தெரியும். அதைச் சொல்லுவேன்; இல்லாவிட்டால், என் வழியே நான் போவேன்.''

> "பொன்னா! உங்கள் இளவரசரைப் பற்றிய கவலை தீர்ந்தது, நாம் அருள்மொழி ராணியைத்தான் தேடி விடுதலை செய்ய வேண்டும்!" என்றார் சிவனடியார்.

சிவனடியார் சற்று யோசித்தார். பொன்னனுடைய முகத்தில் உள்ள உறுதிக் குறியைக் கவனித்தார்.

''பொன்னா! அவசியம் நீ தெரிந்துகொண்டுதான் தீரவேண்டுமா?''

''ஆமாம், சுவாமி.''

''அப்படியானால், சொல்கிறேன். ஆனால், நீ எனக்கு ஒரு வாக்குறுதி கொடுக்க வேண்டும். வேறு யாரிடமும் சொல்லக் கூடாது. பரம இரகசியமாய் வைத்திருக்க வேண்டும்'' என்றார்.

''அப்படியே செய்கிறேன் சுவாமி.''

''போர்க்களத்தில் வீர மரணம் அடைந்த பார்த்திப மகாராஜாவின் ஆணையாகச் சொல்வாயா?''

''பார்த்திப மகாராஜாவின் ஆணையாகச் சொல்கிறேன். சுவாமி!''

''அப்படியானால், இதோ பார்!'' என்று சிவனடியார் அன்று போர்க்களத்தில் பார்த்திபன் முன்னால் செய்ததுபோல், தம்முடைய ஜடா மகுடத்தையும் மீசை தாடிகளையும் நீக்கினார்.

பொன்னன், ''பிரபோ! தாங்கள் தானா?'' என்று சொல்லி, அவர் முன்னால் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான்.

''இதற்கு முன்னால் வள்ளி உனக்குச் சொல்லவில்லையா? பொன்னா!'' என்று சிவனடியார் (மீண்டும் ஜடா மகுடம் முதலியவற்றைத் தரித்துக் கொண்டு) கேட்க, ''வள்ளி பெரிய கள்ளியாயிற்றே! நிஜத்துக்கு மாறான விஷயத்தைச் சொன்னாள். தங்களைத்தான் அவள் சொல்கிறாள் என்று நான் சந்தேகித்துக் கேட்டேன். இல்லை தாங்கள் பார்த்திப மகாராஜா என்று ஒரு பெரிய பொய் புளுகினாள். அவளை இலேசில் விடுகிறேனா, பாருங்கள்! எனக்கும் இப்போது ஒரு பெரிய இரகசியம் தெரியும். அதை அவளுக்குச் சொல்வேனா?'' என்றான்.

பிறகு, பொன்னன் காட்டாற்று வெள்ளத்தில் தான் இறங்கி இளவரசரைக் காப்பாற்றியது முதல், அவரை குந்தவிதேவி தன் பல்லக்கில் ஏற்றி அழைத்துச் சென்றது வரையில், எல்லா விவரங்களையும் சவிஸ்தாரமாய்ச் சொன்னான்.

இதற்கு முன்னாலெல்லாம் எதற்கும் ஆச்சரியம் அடையாதவராயிருந்த சிவனடியார், இப்போது அளவிட முடியாத வியப்புடன் பொன்னன் கூறிய விவரங்களைக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, ''பொன்னா! உங்கள் இளவரசரைப் பற்றிய கவலை தீர்ந்தது. விக்கிரமன் பத்திரமாயிருப்பான். நாம் அருள்மொழிராணியைத்தான் தேடி விடுதலை செய்ய வேண்டும்!'' என்றார்.

**(தொடரும்)**

# புனிதத்தின் கருப்பை!

கோ.பாரதிமோகன்

நில்!
யார் உன்னை
அனுமதித்தது
இந்த
காதல் வனத்துள்?

காடு கமழச் சிரிக்கும்
நாங்கள்
கற்பகப் பூக்கள்!

முன்பொரு நாள்
மோனத் தவமிருந்து
வேண்டி நின்றோம்

எம்
காம்பினைக் கொய்ய
காதலர் கரம்
வேண்டுமென்று

எச்சில் தொட்டு
ரூபாய் எண்ணும்
உன்
ரோக விரல்களால்
தீண்டாதே.

காதலின் ஸ்பரிசமே
எங்கள் ஆடை

உன்
மேனியில் கனப்பதோ
பேராசைப் போர்வை.

நறுமணமே
எங்கள் பாடல்
உனக்கோ
பேயுதட்டுப் பாஷை.

எங்கள் இதழ்களின்
மினுமினுப்பில்
தேவ மகரந்தம்!

உன்
அங்கம் முழுக்க
சாதியச் சகதி.

புனிதத்தின்
கருப்பையில்
பூத்தவர் நாங்கள்!
நீயோ
மதங்களின் காலடியில்
மண்டியிடுகிறாய்.

எம் நிழல் தீண்டும்
தகுதியும்
உனக்கில்லை

போய்விடு!
பூமிக்கு வெளியே
காத்திருக்கிறது
உனக்கான
கல்லறை.

# சிறகு களைந்த தேவதை!

கடைசியாய் பூமிக்கு வந்தேன் - குகை மா.புகழேந்தி, குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.50

மனிதனைக் குழந்தையாக்கி விடுவது காதல். உண்மையாகக் காதலிப்பவர் யோக்கியவான் என்கிறார் புகழேந்தி. கவிதைகளைப் படிக்கும்போது, மனசுக்குள் 'சிறகு களைந்த தேவதையாக ஒரு காதலி உலா வருகிறாள்!

மஹா அவதார் பாபாஜி - பி.வி.எஸ்.ராவ், ஸ்ரீ ஆனந்த நிலையம், 29/3, ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.30

ஆன்மிகத்தை உலகம் முழுதும் பரப்ப, இமயமலையில் வாழ்ந்து, பணியாற்றி வரும் மஹா அவதார புருஷர் பாபாஜி பற்றிய புத்தகம். அவதார நோக்கம், பாபாஜியின் சீடர்கள், அவர்களது சீரிய பணிகள், கிரியா யோகா பயிற்சி போன்ற பல அரிய சிறப்புத் தகவல்கள் அடங்கிய நூல்.

விண்வெளியில் ஒரு பயணம் - கமலநாதன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 02. விலை ரூ.45

விண்வெளிக் கலங்கள், விண்வெளிப் பயணங்கள், விண்கலத்தினுள் விண்வெளி வீரர்களின் அன்றாடச் செயல்கள், சாதனைகள் பற்றிய பல ருசிகரத் தகவல்களைக் கொண்ட நூல். தமது எளிய வசீகர நடையில் நம்மையும் விண்வெளிக்குச் அழைத்துச் செல்கிறார் ஆசிரியர்.

வாடிக்கையாளர் சேவை மூலம் வியாபார வெற்றி! - டி.வெங்கடகிருஷ்ணன், கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தியாகராய நகர், சென்னை - 17. விலை ரூ.50

ஒரு நிறுவனத்தின் வெற்றி - தோல்வியை நிர்ணயிக்கும் முதலாளியான வாடிக்கையாளருக்கு வழங்கப்படும் சேவைகளைப் பற்றி விரிவாகச் சொல்லும் நூல்.

- மித்ரா

ஆண்டுதோறும் தமிழ் பத்திரிகைகளில் இடம்பெறும் விளம்பரங்களில், ஓரளவு சமுதாய சிந்தனையை உள்ளடக்கிய சிறந்த ஒன்று, கல்கி சதாசிவம் நினைவுப் பரிசு பெற தேர்ந்தெடுக்கப்படுகிறது. இதையொட்டி ஆலோசனைக் கூட்டங்கள், ஒவ்வொரு வருஷமும் பிப்ரவரி மாதத்தில் என் இல்லத்தில் நடைபெறும். இதற்கு வருகை தருவோருக்கு என் வீட்டு விலாசம் தவிர, வீட்டைச் சுலபமாக அடைவதற்கான வழியை ஒரு வரைபடமாகத் தயாரித்து அனுப்புவேன். இம்முறை வரைபடம் தயாரித்து 'ஜெராக்ஸ்' எடுத்தபோது, 'கல்கி காரியாலயம் எங்கே இருக்கிறது' என்பது குறித்து ஸோமஸ்கந்தன் எழுதியதுதான் நினைவு வந்தது:

***'சென்னைக்குப் புதிதாக வருகிறவர்கள், எழும்பூர் ரயில் நிலையம் எங்கே இருக்கிறது என்று தேடி அலைய வேண்டாம். அது கல்கி காரியாலயத்துக்கு எதிரேதான் அமைந்திருக்கிறது!'***

1941-ல் கல்கி பத்திரிகை தொடங்கப்பட இருப்பதாகச் செய்தி பரவியபோதே, ஒரு வாலிபர் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தியைக் காண வந்தார். வேலை தேடி வந்ததாகக் கூறியவர், தமக்கு எழுத வரும் என்றும் சொல்லிக்கொண்டார். 'கல்கி' சில வினாடிகள் அவரை மேலும் கீழுமாகப் பார்த்துவிட்டு, ''நமது காரியாலயம் எங்கே அமைந்திருக்கிறது என்பதை நமது வாசகர்களுக்கு முதலில் சொல்லியாக வேண்டும். இதைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதிக் கொண்டுவா'' என்றார். கல்கி வைத்த அந்தப் பரீட்சையில் ஸோமஸ்கந்தன் எழுதிய விடைத்தான்தான் மேலே நான் குறிப்பிட்டது. ''பேஷ்!'' என்றார் கல்கி. வேலை போட்டுக்கொடுத்துவிட்டார்.

அந்த முதல் இதழிலிருந்து 1977 - 78ல் கல்கி தற்காலிகமாக ஓராண்டு வெளிவராமல் நிறுத்தி வைக்கப்பட்டது வரை, ஸோமஸ்கந்தன் கல்கி பத்திரிகையில் சிறப்புப் பணியாற்றினார்; சிரிப்புப் பணியும் ஆற்றினார்! நகைச்சுவை என்பது 'கல்கி' அவர்களுக்குக் கைவந்த கலை என்பது அனைவரும் அறிந்த ஒன்று. நகைச்சுவையின்றி எதையுமே எழுத அவருக்குத் தெரியாது என்றுகூடச் சொல்லலாம். அந்த நகைச்சுவை திணிக்கப்பட்டதுபோலன்றி மிக இயல்பாக அமைந்ததுதான் 'கல்கி'யின் தனிச்சிறப்பு.

நகைச்சுவையாக எழுதும் ஆற்றலுடையவர்களை 'கல்கி' அவர்களுக்கு ரொம்பப் பிடிக்கும். ஸோமஸ்கந்தன் தவிர, 'நாடோடி', 'துமிலன்', 'சாவி' ஆகியோர் அவர்களுடைய ஹாஸ்ய எழுத்துக்காகவே, கல்கி பத்திரிகையின் உதவி ஆசிரியர்கள் ஆனார்கள். நாடோடியின் 'எங்கள் குடும்பம் பெரிது', துமிலனின் 'புனர்ஜென்மம்' ஆகியவற்றை இன்றும் படித்துச் சிரித்து மகிழலாம். சாவியின் எழுத்துப் பயணம் பாப்பா மலரில் தொடங்கி முன்னேறியது. ஸோமஸ்கந்தன் நாவல்கள் எழுதியதில்லை என்றாலும், ஏராளமான சிறுகதைகளை உருவாக்கியிருக்கிறார். அரைப் பக்கக் கதை, ஒரு பக்கக் கதை எழுதுவதில் திறமைசாலி - 'ஸோமாஸ்' என்ற பெயரில் எழுதி வந்தார்.

பின் நாட்களில் ஸோமாஸ் திரைப்பட விமர்சனங்களும் எழுதினார். ஒரு சமயம் 'கல்கி', ''ஏனப்பா! சிரிக்கச் சிரிக்க எழுதுவாயே, இந்த விமர்சனத்தில் நகைச்சுவையையே காணோமே'' என்று கேட்டார்.

''அந்தப் படத்தின் 'காமெடி டிராக்' பார்த்ததில், சிரிப்பே மறந்துபோச்சு'' என்றார் ஸோமாஸ்.

'கல்கி' இடி இடியென்று சிரித்துவிட்டு, **''இப்ப சொன்னியே, அதையே முத்தாய்ப்பாய் எழுதிப்போடு''** என்று கூறி, அவருடைய கையெழுத்துப் பிரதியை அங்கிகரித்துக் கொடுத்தார்.

நகைச்சுவையின் இன்னொரு பிரிவிலும் ஸோமாஸ் இயல்பான தேர்ச்சி

நகைச்சுவையாக எழுதும் ஆற்றலுடையவர்களை 'கல்கி'க்கு ரொம்பப் பிடிக்கும். ஸோமஸ்கந்தன் தவிர, 'நாடோடி', 'துமிலன்', 'சாவி' ஆகியோர், அவர்களுடைய ஹாஸ்ய எழுத்துக்காகவே கல்கி பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஆனார்கள்.

# சிரித்து வாழ வேண்டும்!

பெற்றிருந்தார். அதுதான் 'மிமிக்ரி'! ''என்ன ஸோமாஸ்! சதாசிவம் எப்படிக் கோபித்துக் கொள்வார்? அதைக் கொஞ்சம் மிமிக்ரி பண்ணிக் காட்டுப் பார்ப்போம்'' என்பார் 'கல்கி'.

ஸோமாஸ் சற்று யோசிப்பது போலிருந்துவிட்டு வேண்டுமென்றே 'டிராக்' மாறி, 'கல்கி'யைப் போல் மிமிக்ரி செய்வார். மற்ற உதவி ஆசிரியர்களுடன் சேர்ந்து கல்கியும் அடக்கமாட்டாமல் சிரித்து மகிழ்வார். இந்தச் சமயம் பார்த்து ''என்ன அமர்க்களம்?'' என்று கேட்டுக்கொண்டே சதாசிவம் ஆவலுடன் எட்டிப் பார்ப்பார். மறுபடி சிரிப்பலை பரவும். ''எங்கே, எங்கே, சதாசிவத்துக்காக இன்னொரு தடவை செய்து காட்டு'' என்பார் 'கல்கி'.

**ஸோ**மாஸ் கல்கியின் கீச்சுக்குரலுக்கு மாறி பேசுவார்: ''இந்தாப்பா ஸோமாஸ்! சந்தானம் வந்திருக்கார், பார்த்தியோன்னோ? அவர்கிட்ட அவர் எழுதிய சில கதைகளைத் திருப்பித்

தாரனும்னு சொல்லிண்டிருந்தியே... இதோ அவரே வந்திருக்கார்... அதுக்காக மரியாதை இல்லாம அவர் கையிலேயே கொடுத்துத் தொலைச்சுடாதே! கதையோ கட்டுரையோ எல்லாத்தையும் ஒரு 'பண்டிலா' கட்டி, அவர் கிளம்பற சமயத்தில் காரில் அவர் பக்கத்தில் வைச்சுடு, புரிஞ்சுதா?''

சந்தானத்துக்குக் காட்டப்பட்ட மரியாதையும், கல்கி பாணியில் ஸோமாஸின் போலிப்பும் இணைந்து அட்டகாசச் சிரிப்பைக் கிளற, கல்கி காரியாலயக் கட்டடமே அதிரும்.

திரு க.சந்தானம் சுதந்திரப் போராட்ட வீரர். காந்தி ஆசிரம காலத்திலிருந்து கல்கி அவர்களின் அத்தியந்த நண்பர். நாடு சுதந்திரம் பெற்ற பிறகு, பல உன்னத பதவிகளைத் திறம்பட வகித்தவர். பல சிறுகதைகளையும் கட்டுரைகளையும் கல்கியில் எழுதியிருக்கிறார். ஆயினும் 'கல்கி', பத்திரிகை ஆசிரியர் என்ற தமது உரிமையை எப்போதுமே விட்டுக் கொடுத்தது இல்லை. ராஜாஜி, டி.கே.சி. ஆகியோரது கட்டுரைகளைக்கூட சில தருணங்களில் திருப்பித் தரவோ திருத்திப் பிரசுரிக்கவோ அவர் தயங்கியது கிடையாது.

**மி**மிக்ரியில் சிறந்த இன்னொருவர் சின்ன அண்ணாமலை. ஆனால், அவர் பெரிய மனிதர்களைப் போலிப்பு செய்ய மாட்டார். எளிய மக்கள்போல் நடித்துக் காட்டுவார். அந்நாட்களில் தெருப்பாடகர்கள் உண்டு. அவர்கள் அரசியல் நோக்கர்களாகவும் இருந்து, புதிய புதிய பாட்டுக்களை, காலத்துக்கு ஏற்பப் புனைந்து பாடி மகிழ்விப்பார்கள். விரித்த துண்டில் காசுகள் விழும். அப்படி ஒரு தெருப் பாடகர், ஜஸ்டிஸ் கட்சி தேர்தலில் அடைந்த தோல்வியையும்


● ராஜாஜியை சிரிக்க வைத்தவர்


● சிரிப்புப் பணி செய்த ஸோமாஸ் (நிற்பவர்)

காங்கிரஸ் அடைந்த வெற்றியையும் பாடியதை சின்ன அண்ணாமலை போலிப்பு செய்வார்:

சென்னை அசெம்ப்ளியில்
மன்னர்கள் வீழ்ந்தனர்
தெரியாதா உங்களுக்கு...
தெரியாதா உங்களுக்கு!
யானை முன் பூனை
போட்டியிட்டது போல்
அத்தனை சிங்கங்கள் முன்
சுண்டெலி போல
சிதறி ஓடினார்...
சிதறி ஓடினார்!

(சென்னை)

'உங்களுக்கு' என்ற வார்த்தையிலும் 'ஓடினார்' என்ற சொல்லிலும் ஏராளமான சங்கதிகளைப் போட்டு, தோள்களையும் அதற்கேற்ப ஜிகுஜிகுவென்று குலுக்கிக் கொண்டு, ஹார்மோனியம் வாசிப்பது போலும் நடித்துக் காட்டியபடி சின்ன அண்ணாமலை பாடும்போது, ராஜாஜிகூட புன்னகையுடன் நில்லாமல் சிரித்தே விடுவார் என்றால், சின்ன அண்ணாமலையின் வெற்றிக்கு வேறென்ன சான்று வேண்டும்?

எழுத்தில் மட்டுமின்றி வாழ்க்கையிலும் நகைச்சுவை மிளிரவேண்டும் என்பதில் தீர்மானமாக இருந்தவர் 'கல்கி' உதவி ஆசிரியர்களுடனும் நண்பர்களுடனும் உல்லாசமாகச் சிரித்துப் பேசியது மட்டுமல்ல; ரொம்ப 'ஸீரியஸ்'ஸாக 'ஜோக் கான்ஃபரன்ஸ்லே' நடத்துவார்! அந்த நகைச்சுவை மாநாடுகள் பற்றி விரிவாக இன்னொரு சமயம்...

**(பேசுவோம்)**

இரு பக்கத் தொடர்

# புன்னிகள்... கோலங்கள்... 6

படுதலம் சுகுமாரன்



“அண்ணி...”

குணசேகரன், நெற்றி சுருங்கப் பார்த்துக் கேட்டான்.

“என்ன சொல்றீங்க அண்ணி... அண்ணனுக்கு என்ன ஆபத்து?”

“அதை எப்படிச் சொல்றதுன்னு புரியலை தம்பி.”

“எதுவானாலும் சொல்லுங்க...”

‘கோட்டை போன்ற வீட்டைக் கட்டி ஆளும் புத்திசாலியான, தைரியசாலியான அண்ணியா இது! மழையில் நனைந்த கோழிக் குஞ்சுபோல் நடுங்குகிறார்களே...’ என்று கவலையாய்ப் பார்த்தான்.

பார்வதி சொல்லத் துவங்கினாள்.

“அது ஒரு விபரீதக் கனவு தம்பி. அடிக்கடி வந்து தொல்லை கொடுக்குது. கறுப்பு உருவம் ஒண்ணு, உங்க அண்ணனை நிழல்போலப் பின்தொடருது. அகோரமான உருவம் அது. அவர் போற இடங்களுக்கெல்லாம் போகுது. அதன் முகத்தில் பழிவாங்கும் வெறி. அவர் கவனிக்காமத் தன் பாட்டுக்குப் போறார். அந்த உருவத்தை நான் பார்த்துட்டு, அதைத் தடுக்க நினைக்கறேன். ஆனால், என்னால் நகர முடியாதபடி கால்கள் புதைசேற்றில் இறங்கியிருக்கு. நான் ‘போகாதிங்க. ஆபத்து வருது... திரும்பி வந்துடுங்க’ன்னு கத்தறேன். ஆனால் அவருக்கு என் குரல் கேட்கலை. உருவம் அவரைக் கிட்டே நெருங்கறப்ப, அலறிக்கிட்டே கண்முழிச்சுடறேன். இதை அவர்கிட்ட சொன்னப்போ அலட்சியமா, ‘டி.வி.யில் பேய்க் கதை பார்த்திருப்ப, அதனால்தான் அந்த மாதிரி கனவு வருது’ன்னு சொல்லிடறாரு. இதை மத்தவங்ககிட்டச் சொன்னால் அனாவசியக் குழப்பம் வருமோன்னு மனசுலயே வச்சு மருகிக்கிட்டிருந்தேன். கடவுளை வேண்டிக்கிட்டும், சுலோகம் படிச்சுக்கிட்டும் என்னை நானே சமாதானப்படுத்திக்கிட்டாலும்... இன்னைக்கு என்னமோ மனம் ரொம்ப சஞ்சலப்படுது.” மூச்சு வாங்க பார்வதி சொல்லிக்கொண்டிருக்கும்போதே அமைதியைச் சிதறடித்தது, டெலிஃபோன் மணி.

டெலிஃபோனில் ஏதோ கெட்ட செய்தி வந்துவிடுமோ என்று கலக்கத்துடன் பார்த்தாள், பார்வதி.

‘வா... வந்து எடு...’ என்று அலறி அழைத்தது ஃபோன்.

குணசேகர் சோபாவிலிருந்து எழுந்து, ஃபோனை நோக்கி நகர்ந்தான்.

அவனை அருகில் வரவிட்டு, ரிசீவர் எடுக்கும் முன், ஃபோன் கட்டாகிவிட்டது. ஹால் முழுதும் திகிலூட்டும் அமைதி கவிழ்ந்தது.

(தொடரும்)




# மூர்மார்க்கெட்டில்

நா.வே.அருண்

அந்த இரவை என்னால் மறக்கவே முடியவில்லை. பல வருடங்களைக் கடந்திருந்தாலும், இசையருவி பொங்கி வழிந்த அந்த இரவு, இன்னும் என் காது மடல்களில் வழிந்தபடியே இருக்கிறது... 'ஏரிக்கரை மேலே போறவளே பெண்மயிலே...' இதே பாட்டு திரும்பத் திரும்ப மனதுக்குள் ரீங்கரித்துக் கொண்டேயிருப்பது, ஒரு சங்கீத மாயம்தான். எவ்வளவு தூரம் விலகிப் போனாலும், மீண்டும் இந்த நாலு வார்த்தைகளுக்குள் தேடிப் பறந்து அமர்ந்துகொள்கிறது மனம். அதற்குத் தேவை ஒரு முகாந்திரம்தான். மூர்மார்க்கெட்டில், குப்பையைப் போலக் குவிந்து கிடந்த எத்தனையோ எலெக்ட்ரானிக் சாதனங்களுக்கு நடுவில் கிடந்த வானொலிப் பெட்டி. யாருமே சீந்தாத, பழசாகிப் போன ஒரு செவ்வக மரப்பெட்டிதான். ஆனால், என் மனதின் அலமாரியிலிருக்கும் ஓர் அறுந்த ராகத்தை, அருவியில் பாய்ந்து ஜிவ்வென்று ஒரு மீனைக் கொத்திச் செல்லும் மரங்கொத்தியைப் போல, அநாயசமாகக் கொத்திக்கொண்ட சாயல் அந்தப் பெட்டிக்குள் இருந்தது. ராகத்தோடு மட்டும்

# ஓர் இசை ஆல்பம்!

நின்று விடுவதா சங்கீதம்...? அது கோவிந்த சாமி ஆசிரியர் வீட்டையும், சரகனையும் உறைந்துபோன பனி பிம்பங்களாய்க் கண்முன் நிறுத்திவிடுகிறதல்லவா?

மனைவி என் கைகளில் ஊற்றிக் கொண்டிருந்த ரசம், கைக்குழியை மீறி விரல் மேடுகளின் வழியே வழிந்து, சோற்றுப் பருக்கைகளுக்குள் சிதறிக்கொண்டிருப்பதை உணர முடியாமலே

மீண்டும் 'ஏரிக்கரை மேலே போறவளே பெண் மயிலே...'

''என்னங்க... என்னாச்சு...? இந்த உலகத்துக்கு எப்ப வர்றதா உத்தேசம்?''

திடுக்கென்று அலறிவிட்டது மனம். கைகளிலிருந்த ரசம் என் நாவின் அரும்புகளில் சுவையேற்ற உறிஞ்சிக்கொண்டிருந் தேன்.

எனக்குப் பிடிக்கும் என்றுதான் ஹேமா, சீரக ரசம் செய்திருந்தாள். ஆனாலும், சீரக ரசத்தை மீறி, என் மனசில் கிடந்த பழைய நினைவுகள் செரிக்காமலேயே கிடந்தன.

இடது கையால் அப்பளத்தின் ஒரு துணுக்கைக் கிள்ளி ஹேமாவின் வாயில் வைக்கிறபோதும், என் விரலின் போக்கில் வித்தியாசத்தைக் கண்டுபிடித்துவிட்டாள் கள்ளி. மீண்டும், 'ஏரிக்கரை மேலே...'

'ம்ஹூம்... ஏதோ முனி பிடிச்சிருக்கு...'

பள்ளிக்கூடம் போகிற பிராயத்தில் பாடங்களைப் படிப்பதற்காக எதை எதையோ இழந்திருக்கிறேன். என் கூட்டாளிகள் கபடி ஆடிக்கொண்டிருப்பார்கள். கஜினி முகமது, எத்தனைமுறை படையெடுத்தான் என்று மனப்பாடம் பண்ணிக் கொண்டிருப்பேன் நான். என் கூட்டாளிகள் ஏரியில் முங்கி முங்கி நீச்சலடித்துக் கொண்டிருப்பார்கள். நான் புவியியலில், எத்தனையாவது அட்சரேகை தீர்க்கரேகையில் இந்தியா அமைந்திருக்கிறது என்று எழுதிப் பார்த்துக் கொண்டிருப்பேன். என் கூட்டாளிகள் பக்கத்து வீட்டு ரேடியோவில் பாட்டாய்க் கேட்டு ஜமாய்த்துக்கொண்டிருப்பார்கள். நான் வீட்டுக்குள் ஒரு சிம்னி விளக்கின் முன், அறிஞர் ஐன்ஸ்டீனின் கண்டுபிடிப்பு என்னவென்று 'கடம்' அடித்துக்கொண்டிருப்பேன்.

பள்ளியிலிருந்து கல்லூரிக்குக்கூட போய்விட முடிந்தது. ஆனால், ரேடியோவில் பாட்டுக் கேட்கிற சுதந்திரம் கடைசிவரை எனக்கு வாய்க்கவேயில்லை. எப்போதும் பாட்டுக் கேட்கும் என் பிரியம் அப்பாவுக்கு ஏனோ பிடிக்கவேயில்லை. ஒரு வானொலிப் பெட்டிக்கான என் ஏக்கம் காய்ந்துபோன ரொட்டித் துண்டைப்போல உலர்ந்து கிடந்தது.

அந்த இரவை இன்னும் மறக்கவே முடியவில்லை. தெருவிளக்கே இல்லாத ஒரு கிராமத்தில், அமாவாசை நாளின் இரவு ஒன்பது மணி எப்படி இருக்கும் என்பதை, ஒரு கிராமத்துக்காரனால்தானே புரிந்துகொள்ள முடியும்! கல்லூரியைவிட மிக நெருக்கமாய் என் கிராமம் இருந்தது.

கறுத்த வானம். எட்டிப் பறிக்கிற தூரத்தில் நட்சத்திரங்கள். தெருவில் மல்லாந்து படுத்தபடி... 'ஏரிக்கரை மேலே...' ஒவ்வொரு வார்த்தையும் ஒரு வன தேவதையைப் போல என் காதுகளுக்குள் நுழைந்தது.

ராகத்தின் பிள்ளையாக ஆசீர்வதிக்கப்பட்ட ஒருவனின் குரல், என் கனவுகளைத் தன் கைவிரல்களால் வருடிவிட்ட குளிர்நிறைந்த க்ஷணங்கள்



**'அந்தோணி யார்?' படத்துல வர்ற சீன்தான் இந்தக் கதைக்கான ஸ்டில். இதே மாதிரியான காதல் எல்லார் வாழ்க்கையிலும் இருக்கும். முதுமையில் அதை நினைச்சுப் பார்க்கவே ரொம்ப சந்தோஷமா இருக்கும்.**

அலை...

''மணி... என்னடா பண்ணிக் கிட்டிருக்கே...? பாட்டுக் கேக்கப் போயிட்டயா... படவா ராஸ்கோல்... படிக்கிற பிள்ளைக்கு என்னடா பாட்டு வாழுது...? பாடத்தைப் படிடா முண்டம்...''

என் அப்பாவின் முரட்டுக் கட்டை விரலும், ஆள்காட்டி விரலும் ஒட்டிப் பிசுபிசுத்துக்கொண்டிருந்த 'ஏரிக்கரை மேலே...' வார்த்தைகளை இரண்டு விரல்களால் பிதுக்கி எடுத்துக் கொண்டிருந்தன.

''அந்தக் கன்ராவிய எல்லாம் கேப்பியா... கேப்பியா...?'' அன்று என் முதுகில் விழுந்த அடிகளை மீறி, இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டேதான் இருக்கிறது.

டி.எம்.எஸ்ஸின் எச்சில் தெறித்த அந்த வார்த்தைகளில் ஊறிக் கிடந்த அமுதத்தை, உச்சிமோந்து எடுப்பதற் குள், என் அப்பாவின் முரட்டுக்குரல் என் தலையைப் பிடரி பிடித்து பின்னுக்குத் தள்ளியது.

''ஏண்டீ... ஓம்புள்ளைக்கு ரேடியோ வோணுமாம்...உருப்பட்டாப்புலதான். ஒழுங்காப் படிக்கச் சொல்லு...!''

ஒரு கல்லூரிக்குப் போகிற, வளர்ந்துவிட்ட இளைஞனைக் கௌரவ மாக நடத்தத்தெரியாத அப்பாவின் பிள்ளையாய்த்தான் வளர்ந்தேன் நான்.

எல்லா அம்மாக்களையும்போல பிள்ளைக்குப் பிடித்தமான புலம்பல்களின் சரணாலயமாகத்தான் என் அம்மாவின் மடியும் இருந்தது. ஆனால், அம்மாவுக்கு அப்பாவின் தீர்மானமான முடிவை மாற்றுகிற சக்தி இல்லை.

''இப்ப வேணாண்டா கண்ணா... நீ படிச்சு வேலைக்குப்

போறப்போ வாங்கிக்கிட்டாப் போச்சு...''

ஒரு சாதாரணமான ரேடியோ கைக்கு எட்டாத உயரத்தில், எங்கோ அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருந்தது. என்னால் பொறுத்துக்கொள்ளவே முடியவில்லை.

அப்பாவின் முரட்டுக் கைகளை மீறி, அம்மாவால் என்ன செய்துவிட முடியும்?

கோவிந்தசாமி ஆசிரியர் வீட்டில் பெரிய ஸ்டாண்டில், ஒரு ரேடியோ ரொம்ப கம்பீரமாக நின்றுகொண்டிருக்கும். பக்கத்தில் ஒரு பூஞ்ஜாடி. இன்னொரு பக்கத்தில் ஒரு பொம்மை.

அவருக்கு டி.எம்.எஸ். குரலைவிட 'செய்திகள் வாசிப்பது, சரோஜ் நாராயண சாமி' என்கிற வாசகங்களைத்தான் ரொம்பவும் பிடிக்கும். ஆனால், அந்த இரவில் அந்தப் பாட்டை வழிய விட்டவள் சரசு வாகத்தான் இருக்கும்.

வேலையை விட்டு சென்ட்ரல் ரயில் நிலையம் அருகில் இருந்த மூர்மார்க்கெட் பக்கம், ஏதாவது பழைய புத்தகம் கிடைக்குமா என்றுதான் போனேன்.

புத்தகங்களைவிட சுவாரசியமானதாய், அங்கு பழைய பொருட்களின் கடை இருந்தது. அப்படிப் பார்க்கிறபோது தட்டுப்பட்டதுதான் இந்தப் பழைய காலத்து ரேடியோ. மரப்பலகைகளால் செய்யப்பட்ட ஒரு பெட்டி மாதிரி. முன்புறம் கீழ்ப் பகுதியில் வரிசையாக பட்டன்கள். மேலே முக்கால் பாகத்துக்கு டிசைன் கொண்ட ஒரு பிளாஸ்டிக் திரை. வேறு ஒரு கோவிந்தசாமி ஆசிரியர் வீட்டிலிருந்து வந்திருக்கலாம் போல. அங்கும் யாரோ ஒரு சரசுவின் கைகள் பட்டன்களில் படிந்திருக்கலாம். பிய்ந்து விழுந்துவிடும் அளவுக்குப் பழையதாக இருந்தாலும், சணலால் கட்டிப் பாதுகாத்து வைக்கப் பட்டிருந்த 'குரல்களின் பூங்கொத்து'தான் இந்தப் பெட்டி. ஒரு பழங்காலத்தின் காட்சியகத்தைச் சணலால் கட்டி வைத்திருப்பதாகவே பட்டது எனக்கு. பேரம் பேச விருப்பமே இல்லாமல் வாங்கி வந்து விட்டேன்.

ஹேமாவுக்குப் பழகிவிட்டது. நான் ஒரு 'மாதிரி' என்பதை, கல்யாணம் ஆகி இவ்வளவு நாட்களுக்கப்புறமும் புரிந்து கொள்ளவில்லையென்றால் எப்படி?

''இது எதுக்கு?'' என்று கேட்டபடியே இரண்டு கைகளாலும் பற்றிக்கொண்டாள்.

''ஹேமா... உள்ளே பாட்டுக்காரர்கள் பாடிக்கொண்டிருப்பார்கள்... பத்திரமாய்ப் பிடி'' என்றேன்.

மீண்டும் ஒருமுறை ஒலித்து அடங்கியது போல் பட்டது, 'ஏரிக்கரை மேலே...'

## ஜாலி கவிதை!

கண்களைக் கூர்மையாக்கி
கைகளில் நடுக்கம் மறைத்து
கால்களில் பூனைப் பாதம்
பொருத்தி
பிடிக்க முயல்கிற
பிஞ்சு விரல்களை ஏமாற்றியபடி
பறந்து பறந்து உட்கார்கின்றன
பட்டாம் பூச்சிகள்
உன் பார்வையைப் போலவே...

- கு. இலக்கியன்

# எஸ்.பி.முத்துராமன்




கமல் சொன்ன ஐடியா இதுதான் : ''சார்! உங்க டைரக்ஷனில் நானும் நடிச்சிருக்கேன். ரஜினியும் நடிச்சிருக்கார்; நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து நடிச்ச படத்தையும் நீங்க எடுத்திருக்கீங்க. ஏவி.எம். மாதிரி ஒரு பெரிய ஸ்தாபனம் படம் எடுக்கறப்ப, நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து ஒரு படம் நடிக்கிறதைவிட, நான் நடிக்க ஒண்ணு, அவர் நடிக்க ஒண்ணு என்று ரெண்டு படம் எடுக்கலாமே?'' என்று சொன்னார் கமல்.

ஏவி.எம். சரவணன் சாரிடம், கமலின் கருத்தைக் கூறியதும், ''அதுவும் நல்ல ஐடியாதான்'' என்றார். அதன்படி, ஏவி.எம். ரஜினியை வைத்து எடுத்த முதல் படம் 'முரட்டுக்காளை'. கமலை வைத்துத் தயாரித்த படம் 'சகலகலா வல்லவன்'. முரட்டுக் காளையில் தொடங்கி, ஏவி.எம். நிறுவனத்துக்காக பதிமூன்று படங்களை, நான் இயக்கும் வாய்ப்பு கிடைத்தது. அத்தோடு மட்டுமில்லாமல், ஏவி.எம். நிறுவனம், சின்னத் திரைக்காகத் தொடர்களைத் தயாரிக்கத் தொடங்கியபோது, எழுத்தாளர் சிவசங்கரியின் 'ஒரு மனிதனின் கதை', வெங்கட்டின் 'நிம்மதி உங்கள் சாய்ஸ்' ஆகிய தொடர்களை இயக்கும் வாய்ப்பும் கிடைத்தது. கம்பராமாயணத்தில் 'குகனோடு ஐவரானோம்' என்று ராமர் சொல்வாரே அதுபோல முத்துராமனையும் சேர்த்து நாங்கள் ஐந்து சகோதரர்கள் என்று ஏவி.எம். சரவணன் சொல்வார்.

ஒன்பது வருட இடைவெளிக்குப் பிறகு, ஏவி.எம். நிறுவனம், மீண்டும் படம் எடுக்கிறபோது, அது ஒரு மாபெரும் வெற்றிப் படமாக அமைய வேண்டுமல்லவா? அதுவரை ரஜினி ஏற்று நடிக்காத ஒரு பாத்திரமாக இருக்க வேண்டும் என்று சிந்தித்து, ஒரு கிராமத்துக் கதை; ரஜினிக்கு ஒரு கிராமத்தான் கேரக்டர் என்று பஞ்சு அருணாசலத்துடன் சேர்ந்து முடிவு செய்தோம். கதையில் கிராமத்துக் காளைமாடு ஒன்றுக்கு முக்கியத்துவம் உண்டு. அந்த முரட்டுத்தனம் பிடித்த காளையுடன் மோதி, அதை அடக்குவான் அந்த கிராமத்து இளைஞனான காளையன். அதனால்தான் படத்துக்கு 'முரட்டுக்காளை' என்று தலைப்பு வைத்தோம். ரஜினிக்குப் பொருத்தமான தலைப்புதானே!

அந்தக் கிராமத்தின் ஜமீந்தார்தான்





ஏன் தயக்கம்? நானே அவரிடம் பேசி அவருடைய சம்மதத்தை வாங்கிவிடுகிறேன்'' என்று சொன்னபோது, நாங்கள் நிம்மதி அடைந்தோம்.

சரவணன் ஜெய்சங்கரை நேரில் வரவழைத்து, அவரிடம் விஷயத்தைச் சொன்னதும், அவர் சிறிதும் தயங்காமல், தமது சம்மதத்தைத் தெரிவித்தார். அப்போது அவர் சரவணனிடம் சொன்ன வார்த்தைகள் ஜெய்சங்கர் எவ்வளவு நல்ல மனிதர் என்பதற்கு அடையாளம். ''சார்! நீங்க என்னோட வெல் விஷர். எது எனக்கு நல்லதோ, அதைத்தான் செய்வீங்க'' என்றார்.

# ரஜினி கேள்வி; திரையுலகம் அதிர்ச்சி?!

கதையின் வில்லன். அந்த வில்லன் கேரக்டரில் யாரை நடிக்க வைக்கலாம் என்று யோசித்ததில், கதையை உருவாக்கிய பஞ்சு அருணாசலம், ''நீங்களும், நானும் ஜெய்சங்கர் ஹீரோவாக நடிக்க, நிறைய படம் எடுத்திருக்கிறோம்; இந்தப் படத்தில் வில்லனாக அவரை நடிக்க வைக்கலாமே!'' என்றார். எனக்கும் அது மிகவும் நல்லதொரு யோசனையாகப்பட்டது. சரவணன் சாரிடம் எங்கள் எண்ணத்தைக் கூறியதும், அவரும் 'ஜெய்சங்கர் வில்லனாக நடித்தால் வித்தியாசமாக இருக்கும்' என்று சொல்லி எங்களுக்கு உற்சாகமூட்டினார்.

அடுத்தாற்போல, எனக்கும் பஞ்சு அருணாசலத்துக்கும் ஒரு சங்கடம், ஜெய்சங்கரிடம் போய், 'ரஜினிக்கு வில்லனாக நீங்கள் நடியுங்கள்' என்று எப்படிக் கேட்பது? எங்கள் தர்மசங்கடத்தை சரவணன் சாரிடம் தெரிவித்தபோது, ''நம்ம ஜெய்யிடம் கேட்பதற்கு



'முரட்டுக்காளை' படத்தில், ஜெய்சங்கர் வில்லனாக நடிக்கவிருக்கிறார் என்ற விஷயத்தை நான் ரஜினியைச் சந்தித்துத் தெரிவித்தேன். அதற்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா? ''சார்! ஜெய்சங்கர் மிகவும் சீனியர் ஹீரோ. அவர் நான் ஹீரோவாக நடிக்கிற படத்தில் வில்லனாக நடிக்கச் சம்மதிப்பது அவரது பெருந்தன்மையையும், ஏவி.எம். நிறுவனத்தின் மீது அவர் வைத்திருக்கும் மரியாதையையும், சரவணன் மீது வைத்திருக்கும் அன்பையும்தான் காட்டுகிறது. ஆனால், ஒரு விஷயம். அவர் வில்லனாக இருந்தாலும், சினிமாக்களில் வரும் வழக்கமான வில்லன்களைப்போல இல்லாமல், படம்

## ரசிகர் மன்ற ராஜாக்கள்

ரஜினியை குருவாக ஏற்று அவர் தம் வழி நடந்து வரும் கார்த்திகேயன், தீவிரமான ரஜினி ரசிகர்.

"கட்சி ஆரம்பிக்க வேண்டுமென்று பல கோடி ரசிகர்கள் தலைவர் ரஜினியை நெருக்கினாலும் தீர்க்கமான முடிவு வேண்டி அவர் வாயே திறப்பதில்லை. தமிழகத்தில் எந்த ஒரு நடிகருக்கும் அவாது ரசிகர்கள் இவ்வாறு நெருக்கடி தந்ததில்லை. இதுவே சூப்பர் ஸ்டாரின் சிறப்பு. பல பேர் புதுப் புதுக் கட்சி களை தினந்தோறும் அறிவித்துக்கொண் டிருக்க, எது செய்தாலும் ஆழ்ந்த



யோசனைக்குப் பிறகே என்ற தலை வரின் செயல்பாடு தலைசிறந்தது. அவர் எது செய்தாலும் அதில் அதிகம் பொதிந்திருப்பது அடுத்தவர் மீதான அக்கறைதான்.

இன்றைக்கும் தமிழ் சினிமாவில் அடியெடுத்து வைக்கும் கடைகோடி நடிகன்கூட, அவரின் எல்லையைத்தான் நோக்கமாகக் கொண்டுள்ளான். அந்தள வுக்கு அவரின் ஆற்றல் அளப்பரியதாக உள்ளது. அன்பு, அமைதி, ஆழம் நிறைந்த அறிவு என்கிற முக்கனிகளும் அவருள் சங்கமம்" என்று கூறும் கார்த்திகேயன், விருது நகர் மாவட்டம் சாத்தூரைச் சேர்ந்தவர்.

முழுவதும், குறிப்பாக, நாங்கள் இருவரும் சேர்ந்து வருகிற சண்டைக் காட்சிகளானாலும் சரி, மற்ற காட்சி களானாலும் சரி என்னைப் போன்றே அவருக்கும் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். அதைப் போல, படத்தின் விளம்பரங்களிலும் எனக்கு இணையான முக்கியத்துவத்தை அவருக்குக் கொடுக்க வேண்டும்" என்றார். நாங்களும் ரஜினி கூறியபடியே செய்தோம். அந்தச் சரி சமமான முக்கியத்துவம் படத்தின் வெற்றிக்கு ஒரு காரணமாக இருந்தது.

முரட்டுக்காளை வெளியானபோது, ஜெய்சங்கரின் வித்தியாசமான வில்லன் நடிப்பை மக்கள் மிகவும் ரசித்தனர். அதன்பிறகு அவருக்கு நிறைய படங் களில் வில்லனாகவும், குணச்சித்திர வேடங்களிலும் நடிக்க வாய்ப்புகள் கிடைத்தன. அதைப்பற்றிச் சொல்லும் போது, "முரட்டுக்காளை படத்துக்கு முன்புவரை ஹீரோவாக நடித்துச் சம் பாதித்ததெல்லாம் என்னுடைய சம்பளம். அதன் பிறகு நடித்துச் சம்பாதித்த தெல்லாம், ஏவி.எம்.மினால் எனக்குக் கிடைத்த போனஸ்!" என்று நன்றியுடன் குறிப்பிடலானார் ஜெய்சங்கர்!

முரட்டுக் காளை படத்தில் இடம் பெற்ற ரயில் சண்டைக் காட்சி இன்றைக்குப் பார்க்கிறபோதுகூட மிக வும் த்ரில்லிங்காக இருக்கும். ரயிலில் சண்டை போட்டுக்கொண்டே வரும் போது, திடீரென ஒரு பாலம் வரும். அப்போது சட்டென்று குனிந்துகொண்டு, பாலத்தை ரயில் கடந்தவுடன் மீண்டும் எழுந்து சண்டையைத் தொடர வேண் டும். 'இது மிகவும் அபாயகரமான காட்சி! எனவே, நீங்கள் நடிக்க வேண்டாம். நான் டூப் போட்டு எடுத்துக்கொள்கிறேன்'' என்று ரஜினியிடம் சொன்னேன். அப் போது ரஜினி ஒரு கேள்வியைக் கேட்டு ஒட்டுமொத்த திரை உலகத்தையும் அதிர்ச்சிக்குள்ளாக்கினார்.

**(பயணம் தொடரும்)**

**– எஸ்.சந்திரமௌலி**

# இந்திரலோகத்தில் நா. அழகப்பன்

பூமிக்கு வந்த தெய்வப் பெண் ரம்பை, உரிய நேரத்தில் இந்திரலோகம் செல்லாததால் கற்சிலையாக தண்டனை பெறுகிறாள்; கூடவே யாராவது ஒரு மானுடன் மாலையிடும்போது, உயிர் பெறலாம் என்ற விமோச்சனத்தோடு. அழகப்பன் தன் பரிகாரத்துக்காக மாலையிட அவனையே கணவனாகப் பாவித்து இந்திரலோகம் அழைத்துச் செல்கிறாள். அங்கு அழகப்பன் செய்யும் செப்படி வித்தையும், அதனால் அவன் பெறும் தண்டனையும்தான் கதை. கொஞ்சம் சிரிப்புக் கலந்து சொல்லியிருக்கிறார்கள்.

நாரத முனிவராக வலம்வரும் நாசர் நடிப்பு வழக்கம் போல் அசத்தல். இரவானால் இந்திரலோகம், எமலோகம் என்று சென்றுவிட்டு விடிந்தால் பூலோகம் வரும் வடிவேலுவுக்குப் பாவம் நம்மைச் சிரிக்க வைக்க நேரமே போதவில்லை. ஆனாலும் 90 வயது கிழவன் வேடத்தில் உண்மையிலேயே சபாஷ் பெற்று நடித்திருக்கிறார்.

ஏகப்பட்ட காமெடி நடிகர்கள் இருந்தும் அரங்குக்குள் அமைதியே நிலவுகிறது. விஷயம் என்னவெனில், காமெடி படம் தருவதாகச் சொல்லி, காமெடியே இல்லாதப் படம் தந்திருப்பதுதான் பெரிய காமெடி.



மேலும், ஸ்ரேயா வேறு எக்ஸ்ட்ரா திணிப்பு. உண்மையிலேயே கற்சிலை பெண்ணாக உருமாறி வந்தது போலவே, அழகால் அனைவரது நெஞ்சங்களையும் அள்ளுகிறார் யாமினி சர்மா.

எமனாக வரும் வடிவேல் அழுதக் கண்ணீர் வாய்க்கால் வழியோடி குளமாகத் தேங்கி, அதில் பூத கணங்கள் குளித்துக் கூத்தடிப்பதுச் சிறிதாக நம்மைச் சிரிக்க வைக்கிறது. பூலோகத்தில் உள்ள கள்ளச் சாராயத்தை மேலோகம் வரை கொண்டு செல்வதால் சிரிப்புப் போதை வரவில்லை. அது உல்டாவாகக் காட்டிப் படுத்தியிருந்தால் நன்றாக அமைந்திருக்குமோ? மேலும் படம் முழுக்க அட்வைஸ் மழை வருவதால் ஆடுகளம் சொதசொதப்பாகிறது.

விழிகள் விரிய விரிய கலை பிரமாண்டத்தால் இந்திரலோகம், எமலோகம் என்று புருவம் உயர வைத்திருக்கிறார் ஆர்ட் டைரக்டர் தோட்டாதரணி. அந்தக் கலை பிரமாண்டத்தை அழகு குலையாமல் கொடுத்திருக்கும் ஒளிப்பதிவாளர் கோபிநாத்துக்குப் பாராட்டுக்கள்.

இம்சை அரசனை மனதில் வைத்துக் கொண்டு சென்றால் 'சாரி'. வெகுநாட்களுக்குப் பிறகு செந்தமிழ் வசனங்கள் காதில் குளிரூட்டுகிறது. மனித ரகசியங்கள் அடங்கிய டி.என்.ஏ.வை மருத்துவ விஞ்ஞானிகள் கண்டுபிடித்துவிட்ட, இந்தக் காலத்தில் நம்ம அழகேசன் மனிதனது பிறப்பு இறப்பு இரகசியத்தை இந்திரலோகம் சென்று கண்டுபிடித்து வருவது ஒவ்வாமை தருகிறது.

ஆனால், டைரக்டரின் வித்தியாசமான முயற்சிக்குச் சபாஷ் போடலாம்.

– கார்த்திக்



# கிரிக்கெட்டின்

ஒரே வாரத்தில் இந்திய அணியின் எதிர்காலம் பற்றிய பயம் எல்லோருக்கும் வந்துவிட்டது.

நாளைய இந்தியா என்று வர்ணிக்கப்பட்ட டோனி, உத்தப்பா, கம்பீர், ரோஹித் சர்மா, திவாரி ஆகிய இவர்களை ஆஸ்திரேலியா மைதானத்தில் பார்க்கும் போது சிங்கத்தின் குகைக்குள் அடைத்து விட்டு, பூட்டுப் போட்டதுபோலத் தோன்றுகிறது. பி.சி.சி.ஐயின் புதிய முயற்சி, விழலுக்கு இறைத்த நீர் என்று விமர்சனங்கள் எழத் தொடங்கிவிட்டன. ஆம். அதற்குள்!

20-20 மேட்ச் ஒன்று நடந்தது. எண்பதாயிரம் ரசிகர்கள் முன்னால், வெறி கொண்டு ஆடியது ஆஸ்திரேலிய அணி. காபாவில் நடந்த முதல் ஒரு நாள் போட்டியில், மழைக்கு முன்பு ஆஸ்திரேலியா அணி இந்திய அணிக்குத் தண்ணி காட்டியது. மேகம் கருணை மழை பொழிந்ததால் இரண்டு புள்ளிகள் இந்தியாவின் தட்டில் விழுந்தன.

'இதுதான் நான் கேட்ட டீம்' என்றும் பேசியிருக்கிறார் டோனி. அணித்தலைவருக்கு இந்தச் சலுகைகள்கூடக் கிடைக்கவில்லை என்றால் எப்படி? '2011 உலகக் கோப்பைக்கு நான் கேப்டனாக இருக்கும் போது, என்னுடைய வீரர்கள் ஒவ்வொருவரும் குறைந்தது 80 ஒரு நாள் போட்டிகளிலாவது பங்கேற்றிருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பேன்' என்றும் அருளியிருக்கிறார். வாஸ்தவம்தான். இன்ஸமாம் உல் ஹக், 1992 உலகக் கோப்பையில் ஆடும்போது அவருக்கு அதுதான் முதல் போட்டி. அனுபவம் மட்டும் எல்லாவற்றையும் கற்றுக்கொடுக்கும் என்றால், ஏன் இத்தனை வருடங்களாக சச்சினாலும் கங்குலியாலும் டிராவிடாலும் ஒரு உலகக்கோப்பையைக்கூட வாங்கித்தர முடியவில்லை?

கங்குலி, டிராவிட் போகட்டும். முரளி கார்த்திக் போன்ற ஒரு தரமான ஸ்பின்னரை, எந்த நாட்டிலாவது இப்படி அலைக்கழிப்பார்களா என்று தெரியவில்லை. முரளி கார்த்திக்கால் அடுத்த உலகக் கோப்பைக்கு ஆட முடியும் என்கிற நிலைமை இருந்தும், கண்மூடித்தனமாக அவரை வெளியேற்றியிருக்கிறார்கள். இதன் விளைவுகள் சீக்கிரம் புரியும். ஆட்டம் தவறாமல் சொதப்பினாலும் தினேஷ் கார்த்திக்குக்குத் தொடர்ந்து வாய்ப்புகள் வழங்கப்படுவது மிகுந்த சலிப்பையே ஊட்டுகிறது. தமிழ்நாட்டில் இருந்துதான் ஒரு பத்திரமாத்துத் தங்கம் வேண்டும் என்றால், பத்ரிநாத்தையோ அல்லது இளம் வீரரான முகுந்தையோ தேர்ந்தெடுத்திருக்கலாம். ஆஸ்திரேலியாவில், ஆரம்பத்தில் டோனி நிறையவே தடுமாறியிருக்கிறார். முதல் ஆட்டத்தில் சுரேஷ் ரைனாவை அமர்த்திவிட்டு, அப்போது ஃபிளைட்டிலிருந்து இறங்கிய திவாரியைத் தேர்ந்

**ச.ந.கண்ணன்**

தெடுத்திருக்கிறார். அணியில் சேர்க்கப்பட்ட திவாரி, உத்தப்பா இருவரும் சமீபகாலமாக ரஞ்சி ஆட்டங்களில் மிகச் சுமாராகவே ஆடினார்கள்.

ஷகீர் கான், ஆர்.பி.சிங், இஷாந்த் சர்மா, ஸ்ரீசாந்த் போன்றோரின் வளமான வேகப்பந்து வீச்சைப் பார்க்கும்போது, எண்பதுகளில் பார்த்த மேற்கிந்தியத் தீவு அணியின் ஃபாஸ்ட் பேட்டரி பவுலர்கள் ஞாபகத்துக்கு வருகிறார்கள். அந்தளவுக்குப் புயல் வேகம் இல்லைதான்; ஆனால், பங்களிப்பில் எந்தக் குறையும் இல்லை.

இன்று உலகக் கிரிக்கெட்டுக்கு இலையுதிர் காலம். எல்லா மேன்மக்களும் விடைபெறத் தயாராகி விட்டார்கள். ஆனால்; வசந்த காலம் எல்லா அணிகளுக்கும் வாய்ப்பதில்லை. ஹேடனை விட்டால், அவர் இடத்தை நிரப்ப இன்று ஆஸ்திரேலியாவில் இன்னொரு ஆள் கிடையாது. சோயிஃப் அக்தருக்குப் பிறகு, பாகிஸ்தான் தலைகீழாக நின்றுபார்த்தும் ஒரு



# இலையுதிர் காலம்!



நல்ல பவுலர் (ஆசிஃப் தவிர) கிடைக்கவில்லை. ஃபிளிண்டாப் இல்லாவிட்டால் இங்கிலாந்து அணி பாதியாகிவிடுகிறது. ஷகீர்கான் இல்லாமல் ஏன், டெண்டுல்கர் இல்லாமல் போனால்கூட, இந்திய அணிக்குப் பெரிய தலைவலிகள் ஏற்படுவதில்லை.

இன்று லீ பற்றிப் பேச ஆரம்பித்தால் ஆஸ்திரேலியர்கள் இறுமாப்பு கொள்கிறார்கள். எல்லாப் போட்டிகளிலும் எப்படி ஒரு பௌலரால் சிறப்பாகப் பந்துவீச முடியும்? எனினும், லீ இந்த நிலையை எட்டுவதற்கு, எட்டு வருடங்கள் பிடித்திருக்கிறது. ஆனால் இங்கு, ஒருவீரர் தன் திறமையை வெளிப்படுத்த எட்டு ஆட்டங்கள்கூடக் கிடைப்பதில்லை! அலையில்லாத கடல், சிறந்த மாலுமியை ஒருபோதும் உருவாக்காது. ●

# கண்களில் சங்கமிக்கும் கருணை!

அம்பாளுடைய கண்களைப் பற்றி ஆசார்யர் ஆதிசங்கரர் நுணுக்கமாக வர்ணித்துப் பாடுவார். அவளுடைய கருவிழி கறுப்பாக இருக்கிறது; கருவிழியைச் சுற்றி வெள்ளை விழி. அதே சமயத்தில் அந்த வெள்ளை விழியில் இலேசான செம்மை படர்ந்திருக்கிறது...

கண்ணை வைத்து நாம் பல விஷயங்களைக் கண்டுபிடிக்க முடியும். ஒருவர் பேசுவது உண்மையா... பொய்யா? மனம் நல்ல மனமா... இல்லையா? என்றெல்லாம் கண்டுபிடிக்கிறோம். அதனால்தான் சொன்னார்கள், அகத்துக்குக் கண்கள்தான் சாளரம் என்று!

வெள்ளை விழியானது முழுதும் வெள்ளையாக இருந்துவிடக் கூடாது. அப்படி இருந்தால், அந்த மனத்துக்குள் கொஞ்சம்கூட உணர்ச்சியே இல்லை என்று அர்த்தம். உணர்ச்சி இருந்து, மனம் மென்மையானதாக, பிறருடைய சுக-துக்கங்களை உணரக்கூடிய மனதாக இருந்தால், கண்களில் இலேசாகச் செவ்வரி ஓடியிருக்கும். முழுசாகச் சிவந்திருக்கவும் கூடாது! மென்மையான வெளிர் சிவப்பாக இருக்க வேண்டும். கண்களில் இந்தப் பிரதிபலிப்பு இருந்தால், மனத்திலேயும் அழகான, அளவான உணர்ச்சிகள் உள்ளன என்று புரிந்து கொள்ளலாம்.

### திரிவேணி

அம்பாளுடைய கண்கள் இப்படிச் செவ்வரி ஓடிய கண்களாகத்தானே இருக்கும்! தன்னுடைய குழந்தைகள் எப்படி இருக்கிறார்கள் என்று, அந்தக் குழந்தைகளைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்கக்கூடிய லோக ஜனனி என்றால், அந்தக் கண்கள் எப்படிப்பட்ட கண்களாக இருக்கும்! அதிலே கறுப்பு இருக்கிறது; வெள்ளை இருக்கிறது; சிவப்பும் இருக்கிறது. இந்த மூன்று வர்ணங்களையும் பார்த்துவிட்டு ஆசார்யர் சொன்னார்- "இந்த மூன்றும் என்ன தெரியுமா? மூன்று நதிகள் சங்கமிக்கின்றன. செம்பொன் ஒளி போன்ற நிறத்தில் ஓடக் கூடிய நீருடைய சோனை நதி; கறுப்பு நிறத்துடன் கூடிய தண்ணீருடன் யமுனை நதி; -அதிலே ஆழம் அதிகம். அதனால் கறுப்பாகத் தெரிகிறது. அதிலே கலந்துவிட்ட தாதுப் பொருட்களினால் கொஞ்சம் கறுப்பாகத் தெரிகிறது. இந்தக் காரணத்தால், கறுப்பாக இருப்பதால், காளிந்தி என்றே பெயர் யமுனை நதிக்கு! செந்நிற சோனை, கருநிற யமுனை - இவற்றோடு சேர்ந்து நுங்கும் நுரையுமாக வெள்ளை வெளேரென்று பாயக் கூடிய இன்னொரு நதியாக கங்கை. அம்பாளின் கண்களைப் பார்க்கிறபோது, இந்த மூன்றும் சேர்ந்து பாய்வதாகத் தோன்றுகிறது ஆசார்யருக்கு.

ஆசார்யர் காலத்தில் சோனை நதி அங்கே இருந்தது. பின்னர் பாதை மாறிப்

போயிருக்கலாம். அதற்கான ஆதாரங்கள் நிச்சயமாக இருக்கின்றன.

ஒன்றுமில்லை, சென்னை, செங்கல்பட்டுக்கு அருகே ஓடுகிற 'பாலாறு' - ஒரு காலத்தில் தலைக் காவேரியில் ஆரம்பித்து, குடகு வழியே பாய்ந்து, கர்நாடகத்தைக் கடந்து, மலைப் பிரதேசம் வழியே தமிழ்நாட்டுக்குள் வடக்கு முகமாகத் திரும்பி, இப்போது நாம் பாலாறு என்று சொல்கிறோமே, அந்தப் பகுதியில்தான் பாய்ந்திருக்கிறது! இப்போதிருக்கக் கூடிய தஞ்சை மாவட்டத்தில் காணப்படும் காவிரி, சிறிய காவிரியாக (நதியாக) இருந்திருக்கிறது. பூமியில் ஏற்பட்ட சில மாற்றங்களினால் இந்தப் பக்கம் வடக்கு நோக்கி வந்து கொண்டிருந்த தண்ணீர் திருப்பப்பட்டு, தெற்கு நோக்கிப் பாய ஆரம்பிக்க, அது இப்போது நாம் பார்க்கிற காவிரி நதியாகி, இன்றைய பாலாறு அதிலிருந்து அப்படியே துண்டிக்கப்பட்டுவிட்டது.

இதற்கான ஆதாரங்கள் ஒரு பெரிய ஆய்வின் மூலம் கிடைத்துள்ளன. அப்படியானால், நாலாயிரம் வருடங்களோ பத்தாயிரம் வருடங்களோ சென்றால், ஒரு நதியினுடைய போக்கு மாறும். ஆகவே ஆசார்யர் காலத்தில் கோணை நதி கங்கை-யமுனையுடன் வந்து சேர்ந்திருக்கிறது. அப்புறம் காலப் போக்கில் மாறியிருக்கிறது.

இப்போதுகூட நாம் பிரயாகையில் மூன்றாவது நதியான சரஸ்வதி, அந்தர்வாஹினியாகக் கண்களுக்குப் புலப்படாமல் வந்து கலக்கிறாள் என்கிறோம் அல்லவா; அந்த மாதிரிதான். இந்த மாதிரி மூன்று நதிகள் கூடும் திரிவேணி சங்கமத்திலே ஸ்நானம் பண்ணினால் நம் பாவமெல்லாம் தொலையும்.

ஆசார்யர் என்ன சொல்கிறாரென்றால், அம்பாள் பார்த்தாளாம்; இந்தக் குழந்தைகள் (மனித குலம்) தாமாக வந்து திரிவேணி சங்கமத்தில் விழவில்லையென்றால் பரவாயில்லை; நாம் திரிவேணியை அவர்களுக்குக் கொண்டுபோய் விடலாம் என்று, தனது நயனங்களின் மூலமாக திரி வேணியைப் பக்தர்களுக்குத் தருகிறாளாம்!



"வெண்மையும் கருமையும் சிவப்பும் சேர்ந்த அந்த திரிவேணி சங்கமத்தை எங்கள் பக்கம் கொண்டு வந்து, அந்தப் பார்வையால் எங்கள் பாவங்களைப் போக்கக்கூடியவளாக இருக்கிறாள்'' என்கிறார் ஆசார்யர். அப்படிப்பட்ட அம்பாளுக்குத்தான் **வாம நயனா** என்ற திருநாமம்.

**களைப்பு நீக்குபவள்**

**வாருணி மத விஹ்வலா** - இந்தத் திருநாமத்தைப் பல விதமாகப் பிரிக்கலாம். வாருணி என்பது தேன் - மது. மகரந்தத்

தேன் என்கிறோமே அதற்கு வாருணி என்று பெயர். வாருணி மத விஹ்வலா என்றால், நல்ல மதுரமான தேனை அருந்தினால், எவ்வளவு பரமானந்தம் கிடைக்குமோ அப்படி ஒரு மகிழ்ச்சியில் எப்போதும் இருக்கக் கூடியவள் அம்பாள். என்ன தேன்? என்ன மாதிரி வாருணி? என்றால், பக்தர்கள் தனக்குத் தரக் கூடிய பூஜையும் ஆராதனையும் தேனாகத் தித்திக்க, அந்த மது தருகின்ற மதத்தன்மை அதாவது உயர்ந்த ஆனந்தம் (பிற்காலத்தில் தான் மதத்தன்மை என்பதன் பொருள் மாறியது) - அப்படிப்பட்ட ஆனந்தத்தில் - பரமானந்தத்தில் - எப்போதும் லயித்திருக்கிறாள் அம்பாள்.

**வா**ருணி மத விஹ்வலாவை இன்னொரு விதத்திலும் பிரிக்கலாம்.

வாருணிமான் என்று இன்னொருத்தருக்கும் பெயர் உண்டு - யார் என்றால், ஆயிரம் தலையுடைய ஆதிசேஷன். அப்படிப்பட்ட ஆதிசேஷனுக்கு, ஆயிரம் தலையுடையவனுக்கு அ விஹ்வலாவாக இருக்கிறாள் அம்பாள். அ - விஹ்வலா என்று இங்கே பிரித்துப் பொருள் கொள்ளும்போது, களைப்பு தெரியாமல் வைத்திருக்கக்கூடியவள் என்று அர்த்தமாகும்.

ஆயிரம் தலையுடைய ஆதிசேஷனுக்கு எவ்வளவு களைப்பு இருக்கும்! அந்தக் களைப்பு தெரியாமல் செய்யக்கூடிய அ விஹ்வலாவாக அம்பாள் இருக்கிறாள்.

இதற்குள்ளே இருக்கக்கூடிய தாத்பர்யம் என்னவென்றால், எவ்வளவு பெரிய சிக்கலாக இருந்தாலும், எவ்வளவு பெரிய பாரமாக இருந்தாலும், அம்பாளை நினைத்துக் கொண்டு அந்தப் பாரத்தைத் தாங்கினால், அந்தப் பாரத்தின் களைப்பு தெரியாமல் வைத்திருக்கக்கூடியவள்.

பாரம் என்றால், எது பாரம்? ஆயிரம் தலையுடைய ஆதிசேஷனுடைய பாரம் மட்டும் அல்ல; மனிதர்களுடைய பிறவி பாரம் தெரியாமல், களைப்பு நீக்கம் செய்யக்கூடியவள் அம்பிகை பரமேசுவரி. இந்த வாழ்க்கையைச் சுலபமாக்கித் தருபவள் **வாருணி மத விஹ்வலா.**

**அம்பாளின் கண்களைப் பார்க்கிறபோது, சோனை, யமுனை, கங்கை இந்த மூன்று நதிகளும் சேர்ந்து பாய்வதாக ஆசார்யருக்குத் தோன்றுகிறது.**

**விந்திய மலையில்...**

**வில்வாடிகா** - வில்வத்துக்கெல்லாம் அதிகாரியாக, உயர்ந்தவளாக இருக்கக் கூடியவள்.

**வேத வேத்யா** - வேதத்தின் பொருளாக இருக்கக் கூடியவள்.

**விந்தியாசல நிவாஸினி** - விந்திய மலையில் உறையக் கூடியவள். ஒரு காலத்தில் விந்திய மலை மிக உயரமாக இருந்தது என்று கணக்கு. மலைத் தொடர்களிலேயே மிகப் பழைமையானவை விந்தியமும் அருணாசலமும் (திருவண்ணாமலை). விந்தியம் கீழே போய்விட, அதன் சாயல்கள்தான் இப்போது ஆங்காங்கே இருக்கின்றனவே யொழிய, பழைய, உயரமான விந்தியம் இன்றைக்கு இல்லை. இதற்குப் பல கதைகள் உண்டு.

(வளரும்)



# மனசைக் கலக்கப்

**கா**தலை, இன்றைய இளைய தலைமுறை எப்படிப் பார்க்கிறது என்பதை அறிய 'கலக்கப் போவது யாரு?' ரம்யாவைச் சந்தித்தோம். எப்போதும் மற்றவர்களைக் கேள்வி கேட்பவர், நம் கேள்வி கண்ணிகளில் மாட்டிக் கொண்டார்...

**காதல் தினம் தேவைதானா?**

இதுக்குன்னு ஒருநாள் இல்லை; ஒவ்வொரு நாளும் கொண்டாடலாம்.

*(நீங்க எப்ப கொண்டாடப் போறீங்க!)*

**உங்கள் டிக்ஷ்னரியில காதல்னா..?**

உற்சாகம்... இளமை... சந்தோஷம்...!

*(பின்னே, வாக்கிங் ஸ்டிக், ஹாட் வாட்டர் பாட்டிலாவா இருக்க முடியும்!)*

**காதல் தோல்வியில தாடி வளர்க்கிறவங்க?**

வாழத் தெரியாதுங்க...

*(கையில காசு இருந்திருக்காது)*

**நீங்க காதலிக்கிறீங்களா?**

ஆமாம்; எங்க அம்மாவையும் அப்பாவையும்.

*(அய்யோ பாவம் நீங்க!...)*

**ஏன் பாய்ஃபிரண்ட் கிடைக்கலியா..?**

எல்லாரையும் ஃப்ரெண்டாதான் மெய்டென் பண்றேன்!

*(கொடுத்து வைச்ச ஃப்ரண்ட்ஸ்!)*

**காதல் பொன்மொழி?**

காதலிக்கும்போது ஆண் மனிதனைகிறான்; பெண் தேவதையாகிறாள்!

*(எவ்வளவு பெரிய பொய்!)*

**உங்களுக்கு தேவதையாகும் ஆசை**

## - லக லக ரம்யா




இல்லையா?

இருக்கு; கல்யாணத்துக்கு அப்புறம்!

*(நீங்க தெளிவாத்தான் இருக்கீங்க.)*

**காதலர்கள் தங்களுக்குள் பரிமாறக் கூடிய சிறந்த பரிசுப் பொருள் எது?**

இதயம்தான் வேறென்ன!

*(செலவு மிச்சம்)*

**ஓர் ஆணிடம் ஒரு பெண் எதை எதிர் பார்க்கிறாள்?**

அங்கீகாரத்தை!

*(அது என்ன மாதிரி பலகாரம்?)*

**காதல்ல வருத்தப்படக்கூடிய விஷயம்?**

காதல் தோல்வியில தற்கொலை பண்ணிக்கறதுதான்.

*(த்லைவா த்லைவீச்சு!)*

**படிக்கும்போது காதலிக்கலாமா?**

காதலிக்கலாம் பட் படிப்பை பாதிக்கக்கூடாது!

*(எப்படி... எப்படி...?)*

**காதல் பற்றி ஒரு கவிதை?**

*(ரொம்ப யோசனைக்குப் பிறகு.)*

என்னைக் கருமியாக்கிவிட்டது
உன் காதல்
அதனால்தான்
உன்னைப் பற்றி
ஒருவருக்கும் சொல்லாமல்
ஒளித்து வைத்திருக்கிறேன்

*(அப்படி வாங்க வழிக்கு!)*

**எப்ப வெளியில சொல்வீங்க?**

உன்ன ஒருத்தரும் இல்லை. என்னோட ஹார்ட் ஒப்பனாத்தான் இருக்கு!

*(அப்ளிகேஷன் ரெடி பண்ணுங்க இளைஞர்களே!)*

**காதல் திருமணம்.. அரேஞ்டு திருமணம்?**

அரேஞ்டு பண்ணுன காதல் திருமணம் பெஸ்ட்

*(அப்ளிகேஷனை அப்பா - அம்மாவுக்கு அனுப்புங்கப்பா!)*

**காதலிக்க என்ன தேவை?**

தூய்மையான மனசு; அந்த மனசில் நம்பிக்கை!

*(பர்ஸ் நிறைய பணம் வேண்டாமா?)*

**எப்பவாவது லவ் பண்ணனும்னு தோணுனது உண்டா?**

இல்லை; இல்லவே இல்லை!

*(ஆஹா உண்மை விளம்பி!)*

**வீட்டுல மாப்ள பாத்தாச்சா?**

ஏன் இந்தக் கொலை வெறி உங்களுக்கு!

*(நல்லதுக்குச் சொன்னேன் தாயி)*

**உங்க மனசைக் கலக்கப் போவது யாரு?**

அந்த ஸ்வீட் பாய் யாருன்னு தெரியல, அவன் எங்க இருந்தாலும் என்னோட அட்வான்ஸ் வாழ்த்துகள்!

*(ஜெகஜ்ஜால கில்லாடி நீங்க!)*

**- ராகவ் குமார்**



# போவது யாரு?

வக்கீலும், காவல்துறை அதிகாரியும் சேர்ந்து 'கார்ப்பரேட்' நிறுவனங்களுக்கு உணவு சப்ளை செய்யும் நிறுவனத்தை நடத்தி வருகிறார்கள் என்றால், நம்புவது கொஞ்சம் கடினம்தான். ஆனால், வக்கீலான அறிவுமுடியும், ஓய்வு பெற்ற காவல்துறை அதிகாரியான ஜெயராமனும் சாதித்திருக்கிறார்கள். எப்படி...?

சேனல் : 1

கும்பகோணத்தைச் சேர்ந்தவர் ஜெயராமன். மத்திய தொழில் பாதுகாப்புப் படையில் உயர் காவலராகப் பணியாற்றியவருக்குத் தனியாகத் தொழில் துவங்கி வெற்றிக் கொடி நாட்ட வேண்டுமென்று லட்சியம். 1989-ல் வேலையை ராஜினாமா செய்துவிட்டு சென்னை வந்தவர், கல்யாணங்களுக்குக் காய்கறி, மளிகை சாமான்கள் வாங்கிக் கொடுக்கும் ஏஜென்சி ஒன்றைத் துவக்கினார். தொடர்ந்து சமையல் காண்ட்ராக்ட், மொத்த கல்யாணத்தையும் நடத்திக் கொடுக்கும் காண்ட்ராக்ட் என்று தொழிலை அபிவிருத்தி செய்தார். ராஜீவ்காந்தி இறந்தபோது, ஊரே மூன்று நாட்கள் முடங்கிக் கிடந்த நேரத்தில், ஒப்புக்கொண்ட மூன்று திருமணங்களையும் ஜாம்ஜாமென்று நடத்திக் காட்டியவர். இன்று ஜெயராமனின் 'ஜெய்மாருதி மேரேஜ் காண்ட்ராக்டர்' நிறுவனம் கொடிகட்டிப் பறக்கிறது.

சேனல் : 2

சேலம் பக்கத்தில் நடுப்பட்டியைச் சேர்ந்தவர் அறிவுமுடி; வழக்கறிஞர். சென்னை கேளம்பாக்கத்தை ஒட்டிய பகுதியில் ரியல் எஸ்டேட் தொழிலைத் துவங்கினார். இவர் தொழில் துவங்கிய நேரம், ஓ.எம்.ஆர். சாலையில் கம்ப்யூட்டர் மென்பொருள் உற்பத்தி நிறுவனங்கள் வந்து குவிந்து விட்டன. ரியல் எஸ்டேட் வியாபாரம் சூடுபிடிக்க, பணம் குவிந்தது. ஆனால், அறிவுமுடி கடவுளை மறக்கவில்லை. முக்கிய கோயில்களில் கும்பாபிஷேகம் நடக்கும்போது, பக்தர்களுக்கு அன்னதானம் செய்வதை ஆத்ம திருப்தியுடன் செய்தார். அதற்கு அவர் நாடியது ஜெய்மாருதி ஜெயராமனைத்தான். தரமான உணவை நியாயமான ரேட்டில் தயாரித்து வழங்கிய ஜெயராமனின் பணியில் அறிவுமுடிக்குத் திருப்தி.

சேனல்: 3

சென்னை எல்காட் நிறுவனத்தில் துணைத் தலைவராக இருப்பவர்



# கார்ப்பரேட் கட்டுச்சாதம்!



● ஜெயராமன்

வெங்கட்ராமணி. ஓ.எம்.ஆர். சாலையின், மென்பொருள் நிறுவனங்களில் வேலை செய்பவர்களுக்குத் தரமான டிபன், சாப்பாடு கிடைப்பதில் பிரச்னை. நல்ல ஹோட்டல்கள் அந்தப் பகுதியில் இல்லாதது ரமணிக்குப் பெரும் குறையாகப் பட்டது. பெரிய நிறுவனங்களில் கேன்டீன் இருந்தாலும், நிறைய சிறிய நிறுவனங்களில் வேலை செய்பவர்களுக்கு டீக்கடைகளும், சுகாதாரமற்ற உணவு விடுதிகளுமே கதி. 'தரமான டிபன், சாப்பாட்டை, நியாயமான விலையில் நிறுவனங்களுக்கே சென்று சப்ளை செய்யும் தொழிலை யாராவது துவக்கினால் பிஸினஸ் அட்டகாசமாக இருக்குமே' என்று கருதினார். அறிவுமுடியிடம், 'உங்களிடம் பணம் இருக்கிறது. ஜெய்மாருதி ஜெயராமனைச் சேர்த்துக் கொண்டு இந்தத் தொழிலைத் துவங்கலாமே' என்று யோசனை சொன்னார்; பற்றிக் கொண்டது.



**மிக்ஸட் சேனல்:**

ஆறே மாதங்களில் எண்பது லட்ச ரூபாய் செலவில் உருவாகி விட்டது ஓ.எம்.ஆர். ஃபுட்ஸ் நிறுவனம். கேளம்பாக்கத்தில் மாஸ்டர் கிச்சன் நிறுவனத்துக்கு அறிவுமுடி தலைவர்; ஜெயராமன் நிர்வாக இயக்குனர். சமையலுக்கு மிக நவீன இயந்திரங்கள். தண்ணீரைச் சுத்திகரித்துப் பயன்படுத்த நவீன இயந்திரம். ஒரு நாளைக்கு 25,000 பேருக்குச் சமையல் செய்யும் வசதி. 45 பேர் வேலை செய்கிறார்கள். இன்று அந்தப் பகுதியின் கார்ப்பரேட் நிறுவனங்களில் வேலை செய்யும் ஆயிரக்கணக்கான மென்பொருள், பி.பி.ஓ. ஊழியர்களுக்கு டிபன், சாப்பாட்டைச் சரியான நேரத்துக்கு அனுப்புகிறது ஓ.எம்.ஆர்.நிறுவனம்.

''கம்ப்யூட்டர் நிறுவனங்களில் வேலை செய்பவர்கள், கண்களைப் பாதுகாக்க வேண்டியது மிக அவசியம். எனவே, எங்கள் லஞ்ச் மெனுவில் சத்துமிக்க காய்கறிகள் தினமும் உண்டு. சுத்த சைவ உணவு. கீரையும், கேரட்டும் அன்றாடம் உண்டு. இதுதவிர, வேக வைத்த காய்கறிகள். சாப்பாடு முப்பது ரூபாய்தான். காலை டிபனுக்கு இட்லி, இடியாப்பம், பொங்கல், வடை என்று ஜமாய்க்கிறோம். இரவு டிபன் சப்பாத்தி, நான், சென்னா, பச்சைப் பட்டாணி'' என்கிறார் ஜெயராமன்.

இனி என்ன செய்வதாக உத்தேசம்?

''இளைஞர்களுக்கும், பெண்களுக்கும் கேட்டரிங் பயிற்சியை உதவித் தொகையுடன் கொடுப்பதாக இருக்கிறோம்.''

ஓ.எம்.ஆர்.நிறுவனத்தில் தினசரி கல்யாணம்தான்!

- ஸ்ரீநி


* கிருஷ்ணசுவாமி

# கோர்ட்டில் கேட்ட மன்னிப்பு!

1958ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட நாரத கான சபாவுக்கு, இது பொன்விழா ஆண்டு. கோலாகலமான பொன்விழா கொண்டாட்டத்துக்குத் தலைமை, முன்னாள் ஜனாதிபதி அப்துல் கலாம்.

**நாரதகான சபா பற்றி அதன் செயலாளர் கிருஷ்ணசுவாமியின் மலரும் நினைவுகள்:** ''ஆரம்ப காலத்தில், மைலாப்பூர் வி.எம். தெருவில் ஓர் இடத்தில் கீற்றுக் கொட்டகையில்தான் எங்கள் சபாவின் நிகழ்ச்சிகள் நடைபெறும். அங்கே, வைஜெயந்தி மாலாவின் நடன நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தோம். சிறப்பு விருந்தினர் அப்போதைய காவல்துறை ஐ.ஜி.யான பாலகிருஷ்ண ஷெட்டி. நல்லபடியாக நிகழ்ச்சி நடந்து முடிந்தது. ஐ.ஜி. விடைபெற்றுச் சென்றவுடன், போலீஸ் வந்தது. ''நிகழ்ச்சிக்கு நீங்கள் போலீஸ் அனுமதி வாங்கியிருக்க வேண்

நடத்தியது தவறு. ஸ்டேஷனுக்கு வாருங்கள்'' என்று அழைத்துச் சென்றனர்! ''நடன நிகழ்ச்சிக்கு போலீஸ் அனுமதி வாங்கவேண்டும் என்று தெரியாது'' என்று சொன்னதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஸ்டேஷனில் வைத்து மறுநாள் கோர்ட்டுக்கு வரச்சொல்லி, எங்களுக்கு சம்மன் கொடுத்தார்கள். மறுநாள் கோர்ட்டுக்குப் போனோம். கோர்ட்டில் தெரியாமல் செய்துவிட்ட தவறுக்கு மன்னிப்புக் கேட்டோம். நீதிபதி, எங்கள் விளக்கத்தை ஏற்றுக் கொண்டு, மன்னித்து, எங்களை விட்டுவிட்டார்.

**ச**பாவுக்கு ஒரு சொந்தக் கட்டடம் தேவை என்று சொல்லி 1972ல், டி.டி.கே. சாலையில் முதலியாண்டான் செட்டியார் குடும்பத்துக்குச் சொந்தமான இடத்தை வாங்கிவிட்டோம். நாங்கள் இடம் வாங்கிய சில நாட்களில், டவுன் பிளானிங் சட்டம் வந்துவிட்டதால், 'மக்கள் வசிக்கும் பகுதியில், பெரிய அரங்கம் கட்ட அனுமதி கிடையாது' என்று சொல்லிவிட்டார்கள்! முதல்வர் எம்.ஜி.ஆர். அவர்களைச் சந்தித்துப் பேசி, சட்டத்திலிருந்து பிரத்யேக விதிவிலக்குப் பெற்றோம். அதன் பிறகு கட்டடம் கட்ட ஆரம்பித்தோம். சோதனையாக, அப்போது கடுமையான சிமென்ட் தட்டுப்பாடு ஏற்பட்டது. இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை 200 மூட்டை சிமென்ட் மட்டுமே தரப்பட்டது. அதனால் கட்டட வேலையில் பெரிய அளவில் சுணக்கம் ஏற்பட்டது. ஆக, 1976ல் ஆறரை லட்ச ரூபாய் பட்ஜெட்டில் ஆரம்பித்தது, ஒரு கோடி ரூபாய் செலவில் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து, 1988ல்தான் கட்டடம் கட்டி முடிக்கப்பட்டது! வங்கிக்கடன் தவிர, சில நெருங்கிய நண்பர்கள் தக்க நேரத்தில் கடனுதவி செய்ததையும் மறக்க முடியாது. அரங்கத்தின் துவக்க விழாவின் போது 51 லட்ச ரூபாய் கடன் இருந்தது. அடுத்த எட்டு ஆண்டுகளில் கடனை அடைத்தது ஒரு சாதனைதான்.

**- எஸ்.சந்திரமௌலி**

* வைஜெயந்தி மாலா


### மின்னல் கதை

# நியாயம்!

**வெ. ராம்குமார்**

"எங்களால இந்தக் காதலை அங்கீகரிக்க முடியாது." தீர்க்கமாய்ச் சொன்னார்கள் அசோக்-கமலி தம்பதியர்.

"எதுக்காக? நான் காதலிக்கிற சுரேஷ், ஜெண்டில்மேன். எந்தவிதக் கெட்ட பழக்கங்களும் கிடையாது. என் மேல உயிரே வைச்சிருக்கார். அவங்க சைட்ல ஒத்துக்கிட்டாங்க. நீங்க மட்டும் ஏன் மறுக்கறீங்க?" கோபமாய்க் கேட்டாள் தீபா.

"நீ சின்னப் பொண்ணு; உனக்கு விவரம் பத்தாது. நீ வேலை பார்க்கறதுனால, நீ சொல்ற முடிவுக்கு நாங்க கட்டுப்பட வேண்டிய அவசியமில்லை" - கடிந்தான் அசோக்.

"ஏன், நீங்களும், அம்மாவும் படிப்பைப் பாதியில விட்டுட்டு, குடும்பத்துலகூடச் சொல்லிக்காமல் ஊரைவிட்டே ஓடி வந்து, இப்ப வாழ்ந்து காட்டலையா? பெத்தவங்களோட சம்மதத்தோடுதானே கட்டிக்க ஆசைப்படறேன். இது தப்பா?"

அசோக்குக்கும், கமலிக்கும் மகள் கேட்ட கேள்வியின் நியாயம் புரிந்தது. மேலும், அவள் முடிவின் உறுதி தெரிந்தது.

சிரித்துவிட்டனர் இருவரும். சிரிப்பில் வெளிப்பட்டது சம்மதம்!



# உகாண்டா நாட்டு உயர் அதிகாரி!

உகாண்டா நாட்டில், ஓர் உயர் அதிகாரியின் புத்திசாலித்தனத்தை எல்லோரும் மதித்தார்கள். அதனால், சக அதிகாரிகள்கூட அவரிடம் நெருங்கிப் பழகுவதில்லை. ஒருநாள் அவர் மனநல மருத்துவரை அணுகி, "தன் அறிவுக்கூர்மையில் கால்பாகத்தைக் குறைத்துவிட முடியுமா" என்று கேட்டார். அவர், "இது ஒரு நவீன இயந்திரம். புத்திசாலித் தனத்தைக் கூட்டலாம்; குறைக்கலாம். ஒரு மணி நேரத்தில் கால் பாகம் குறையும்படி 'செட்' செய்துவிட்டுப் போகிறேன். ஒரு மணி நேரம் கழித்து, நானே வந்து கழற்றுகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போன டாக்டர், அதை மறந்தேவிட்டார். நான்கு மணி நேரம் கழித்துதான் நினைவுக்கு வந்தது. 'ஐயோ!' என்று பயந்தபடி வந்து "எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டார். அதிகாரி எழுந்து நின்று, "தலைவர் வாழ்க! வருங்கால முதல்வரே வாழ்க!" என்றார்.



- ஹ்யூமர் கிளப்பில் கேட்டது...

- அ.ஷண்முகசுந்தரம்

**ரீடர்ஸ் கார்னர்**



# பாட்டெழுதுறார்



அந்தி மழை பொழிகிறது
ஒவ்வொரு துளியிலும்
என் காசு கரைகிறது...
வெயிலையும் மழையாய்க்
கருதுகிறேன் - வேறு
வழியின்றிப் புன்னகை
ஏந்துகிறேன்...
(அந்தி மழை...)



போவோமா ஊர்கோலம்...
உன் கூந்தல்தான் கார்காலம்
உன்னைப் பார்த்த அந்நேரம்...
நான் ஆனேன் அலங்கோலம்
(போவோமா...)



ஆண்: உன் புன்னகை
என்ன விலை?
பெண்: எங்க அப்பனோட
அருவா விலை...
ஆண்: உன் கன்னங்கள்
என்ன விலை?
பெண்: செருப்புக்குச்
சொன்ன விலை...
(உன் புன்னகை...)

# காப்பியரசு காத்தமுத்து!






ஒருவர் மீது
ஒருவர் சாய்ந்து...
தயாரிப்பாளர் தலையில
மிளகாய்ச் சாந்து...
(ஒருவர் மீது...)



ஏனுங்க மாப்பிள்ளை
என்ன நினைப்பு?
நீ
கிச்சுக்கிச்சு மூட்டியதால
வந்த சிரிப்பு
(ஏனுங்க...)



யாரடி நீ மோகினி
தாடிக்குப் பின் தாவணி
என் காதுல சுத்துற பூவு
உன் கன்னம் பரோட்டா மாவு
(யாரடி...)

ரீமிக்ஸ் ரவுசு :
கதிர்பாரதி

# மனவியல் ரீதியில்

**என் கணவர் தினமும் மது அருந்துகிறார். இதனால் வீட்டில் காரசாரமான விவாதம்தான் எப்போதும். மனநல மருத்துவரால் இந்தப் பழக்கத்தை மாற்றிவிட முடியுமா?**

- ரேவதி, சேலம்

மனவியல் மருத்துவர் டாக்டர் ஆனந்தன் கூறும் விளக்கம் : மதுப் பழக்கம் கொண்டவர்கள் விவாதத்தினால் ஒரு போதும் திருந்துவதில்லை. சொல்லப்போனால், வீட்டில் உள்ளவர்கள் அடிக்கடி கோபித்துக் கொண்டால் இந்தப் பழக்கம் அதிகமாகலாம்!

குடிகாரரால் அவரது குடும்பத்துக்கு ஏற்படக்கூடிய அபாயங்கள் நிறைய உண்டு. ஆனாலும் ஒன்றைப் புரிந்துகொள்ள வேண்டும். குடிப்பழக்கம் என்பது ஒரு வியாதி (தீவிர குடிகாரர்கூட தமது சுயகௌரவ காரணமாக இதை ஒப்புக்கொள்ளமாட்டார் என்பது வேறு விஷயம்). எனவே, அவருக்குச் சிகிச்சை அளிக்கவேண்டும்.

மதுப் பழக்கத்துக்கு அடிமையானவர்களை மீட்கும் அமைப்புகள் உள்ளன. அவற்றில் மனவியல் மருத்துவர்களும் இருக்கிறார்கள். எனவே, உங்கள் வாழ்க்கையை நினைத்து நொந்துகொள்வதைவிட, எப்படியாவது உங்கள் கணவருக்குச் சிகிச்சை அளிக்கச் செய்வதே அறிவியல் பூர்வமானது; அறிவுபூர்வமானது.

**காலையில் எழுந்தவுடன் பல்லைக் கூட விளக்காமல், நான்கு பெரிய டம்ளர் தண்ணீர் குடித்தால் இரத்தக் கொதிப்பு, சர்க்கரை நோய் முதல், சிறுநீரகங்கள் வரை கட்டுக்குள் வரும் என்கிறார்களே...**

- நாராயணன், மதுரை

சிறுநீரக இயல்துறை நிபுணர் டாக்டர் என்.கோபாலகிருஷ்ணன்: தண்ணீர் போதிய அளவு உடலுக்குத் தேவைதான். அப்படிக் கிடைக்கவில்லையென்றால், சிறுநீரகத்தில் கற்கள் உண்டாகவும்



## சிறுநீரகப் பாதிப்பு உள்ளவர்கள் அதிகமாகத் தண்ணீர் அருந்தினால் ஆபத்தில் முடியக்கூடும்

# மது பழக்கச் சிகிச்சை!



**யாருக்கு எந்தவித மான டூத் பிரஷ் ஏற்றது?**
**- கங்காதரன், நாகர்கோவில்**

**பல்மருத்துவர் டாக்டர் என்.வி.ஆறுமுகம் :** பொதுவாக மீடியம் என்று குறிப்பிடப்பட்டிருக்கும் பிரஷ்ஷை வாங்குவது தான் நல்லது. சாஃப்ட் என்று குறிப்பிடப்பட்டிருக்கும் பிரஷ்ஷைப் பயன்படுத்தினால், அது தேவையான அளவுக்குப் பற்களைச் சுத்தம் செய்யாமல் போகலாம்.

ஆனால், பல் கூச்சம், ஈறிலிருந்து ரத்தக்கசிவு போன்றவை ஏற்பட்டிருந்தால், 'சாஃப்ட்' வகை டூத்பிரஷ்ஷைத்தான் பயன்படுத்தவேண்டும்.

எப்படி இருந்தாலும் ஹார்ட் என்று குறிக்கப்பட்டுள்ள டூத்பிரஷ்ஷைத் தவிர்த்து விடுங்கள். அதைப் பயன்படுத்தினால் பற்களில் உள்ள எனாமல் தேய்ந்துவிட வாய்ப்பு உண்டு.

வாய்ப்பு உண்டு.

ஆனால், நீங்கள் கூறும் வழிமுறைக்கு அலோபதி மருத்துவத்தில் எந்த வித ஆதாரமும் இல்லை. எந்த அளவுக்குத் தேவையோ, அந்த அளவு நீரை மட்டுமே நம் உடல் ஏற்றுக்கொள்ளும். மீதியை சிறுநீராக வெளியேற்றிவிடும். தட்பவெப்ப நிலைக்கேற்ப (கோடைக் காலத்தில் அதிகமாகவும், குளிர் காலத்தில் அதைவிடக் குறைவாகவும்) தண்ணீர் குடித்தால் போதுமானது. நீங்கள் கூறும் ஹைட்ரோதெரபி எனப்படும் முறையை ஆங்கில மருத்துவம் ஏற்கவில்லை.

தவிர, மிக அதிகமாக ஒரே சமயத்தில் தண்ணீர் குடிப்பது சிலவகை இதயநோய் கொண்டவர்களுக்கு (முக்கியமாக இதயச் செயலிழப்பு நேர்ந்தவர்களுக்கு) நல்லதல்ல. தவிர, சிறுநீரகப் பாதிப்பு உள்ளவர்கள் இப்படி அதிகமாகத் தண்ணீர் அருந்துவது விபரீதத்தில் கொண்டுவிடலாம்.

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

**கடைகளில் விற்கும் டூத் பிரஷ்களில் சாஃப்ட், மீடியம், ஹார்ட் என்று மூன்று வகைகள் இருக்கின்றன. யார்**





இசையால் வசமான இரு இதயங்கள் வேல்முருகனும், கலாவும். அசல் மனம் மாறாத கிராமத்துப் பின்புலத்திலிருந்து இசையார்வம் மேலிட வந்த வேலுவும், நாட்டியம் கற்றுக்கொள்ள, சௌராஷ்டிரா மாநிலத்திலிருந்து வந்த கலாவும் சங்கமித்துக்கொண்டது, சென்னை, அடையாறின் அருகே உள்ள அரசு இசைக் கல்லூரியில். வெள்ளந்தியான கிராமத்துக் குணமும், கனிவுமிக்க பேச்சும், அயராத உழைப்பும், இனிய குரலும் உடைய வேல்முருகனைக் கண்டு கொண்டது காதல்.

''இயற்கையோடு ஒன்றிப்போகிற ஒன்றுதான் காதல். எந்த ஒரு பெண்ணும் தன்னைப் பார்க்கணும், பாராட்டணும்னு ஏங்குற, தவிக்கிற மனசு ஆணுடையது. அடுத்த எதிர் பாலினத்தைப் புரிஞ்சிக்கிட்டு, விட்டுக்கொடுத்து, அன்பு காட்டி அரவணைச்சா காதல் உங்கள அணைக்கும்'' என்று ரசனையாகப் பேசும் வேல்முருகன், தற்போது திரைப்படங்களிலும் பாடிக் கொண்டிருக்கிறார்.

''வாழ்க்கையைப் பற்றிய எந்தத் தெளிவும், புரிதலும் இல்லாமல் காதலிப்பவர்கள் தான், காதலில் தோற்றுப் போய் விட்டேன் என்கிறார்கள். உண்மையில் காதல் தோற்பதேயில்லை. வாழ்க்கையில் ஒருவரையொருவர் சரியாகப் புரிந்து கொள்ளும் போதே காதல் ஜெயித்து விடு

# அணு





# அணுவாய் வாழ..!

கிறது. உங்களுடைய துணையை நீங்க மதிச்சா, பாராட்டினா காதல் உங்களுக்குத் தலை வணங்கும்; சிகரத்தில் தூக்கி வச்சு அழகு பார்க்கும். எல்லோருக்கும் நல்ல வாழ்க்கை அமையும்னு சொல்ல முடியாது. 'உங்க உழைப்பின் மீது நம்பிக்கை வெச்சு உங்ககூட வர்றேன்'னு பொறந்த வீட்டைத் தூக்கிப்போட்டு, என்னோட உழைப்பை மட்டுமே பார்த்து, என் கையைக் கோத்துக் கிட்டவங்க கலா.

காதலிக்கிற, காதலிக்க நினைக்கிற வங்களுக்கு நாங்க ஓர் உதாரணமா வாழ்ந்து காட்டுறோம்'' என்று பேசும் வேல்முருக னையே வியப்பும், வெட்கமும் மேலிடப் பார்த்துக் கொண்டிருக்கிறார் கலா.

கலாவுக்கு ஏழு மொழிகளில் பேசத் தெரியும் என்பதும், பாரம்பரிய இசைக் கருவிகளான பறை முதல் பல வற்றை அவர் வாசிப்பார் என்பதும் கூடுதல் தகவல். டாக்டர் எம்.ஜி.ஆர். - ஜானகி மகளிர் கலைக் கல்லூரியில் எம்.ஏ. நாட்டியம், இரண்டாமாண்டு படித்துக் கொண்டிருக்கிறார் கலா. மூன்று அநாதை இல்லப் பள்ளிகளைத் தத்தெடுத்து, இலவச இசை வகுப்புகளையும் எடுத்து வருகிறது இந்த ஜோடி.

மேலும், நாட்டியப்பள்ளி ஆரம்பித்து, நடனப் பயிற்சி பெற விரும்புகிறவர்களுக்கும், ஏழைக் குழந்தைகளுக்கும் இலவசமாக பயிற்றுவிக்க வேண்டுமென்பது கலாவின் ஆசை.

*'அணு அணுவாய் வாழ*
*முடிவெடுத்துவிட்ட பின்*
*காதல் மிகச் சரியானதுதான்'*

என்றார் கவிஞர் அறிவுமதி. அப்படி அணுஅணுவாய் வாழக் கற்றுக்கொண்டிருக்கிறார்கள் இந்த இசைத் தம்பதி... எத்தனை காதலர்கள் இதுபோல...?!

– கிராபியென் ப்ளாக்



# சரிந்துவிழும்

# இப்ப விழுமோ...

''கடந்த (1996-2001) தி.மு.க. ஆட்சியின் போது, தமிழகத்தில் நூறு இடங்களில் சமத்துவபுர வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டன. இந்தமுறை அதுபோல நூற்றியேழு இடங்களில் சமத்துவபுர வீடுகள் கட்டித் தரப் படும்!'' என அண்மையில் அறிவித்திருக்கிறார் தமிழக முதல்வர் கருணாநிதி. ஏற்கெனவே கட்டிக் கொடுக்கப்பட்ட வீடுகள் எப்படியிருக்கின்றன. அறிந்து கொள்ள திருவெறும்பூர் ஊராட்சி ஒன்றியத்தில் நவல்பட்டு சமத்துவபுரத்துக்கு விசிட் அடித்தோம்.




''இது என்னோட மருமவ பேர்ல இருக்குற வீடு. மவனும் மருமவளும் பூ வித்து வியாபாரம் பண்ணிதான் குடும்பம் நடக்குது. முதல்ல குடி வந்தப்பவே சுவர்ல கொஞ்சமா விரிசல் இருந்திச்சு. இப்போ எல்லாப் பக்கமும் சுவரு ரொம்ப விரிசலா ஆயிடுச்சு. இதுலதான் நாங்க பன்னெண்டு பேரும் இருக்குறோம்!'' என்கிறார் பாலாயி அம்மாள்.

''நான், என்னோட அண்ணன் அண்ணி, அவுங்களோட புள்ளைங்க எல்லாம் இந்த வீட்லதான் குடியிருக்கோம். இங்க எல்லா வீடுகள்லயும் பார்த்தீங்கன்னா, பாத்ரூம்ல சிமெண்ட் சன்னல் ரொதியோட சுவரும் சேர்ந்து தனியா புட்டுக்கிட்டு எப்ப வேணாலும் கீழே விழுந்துடும்ங்கற நிலைமையில இருக்கு. பொதுவா எந்த வீட்டுக்கும் அடித்தளம் சரியாப் போடலை. அதனாலத்தான் நிறைய வீடுங்க உக்காந்து போயிடுச்சு!'' என்கிறார் உதயன்.

''எங்க அம்மா ஜெயந்தி கூலி வேலைக்குப் போய்த்தான் எங்களைக் காப்பாத்தி வர்றாங்க. எங்க வீட்ல சிமெண்ட் தரையெல்லாம் மேடும் பள்ளமுமா மண்ணுல உட்கார்ந்து போயிடுச்சு. கற்றுச் சுவரெல்லாம் கண்டபடி வெடிச்சுக் கிடக்கு. இப்ப விழுமோ... எப்ப



★ ஜான்சிராணி



★ பாலாயி அம்மாள்



★ உதயன்

# சமத்துவபுரம்





● கலெக்டர் ஆஷிஷ் வச்சானி

# எப்ப விழுமோ..!

விழுமோ... அப்படிங்கற பயத்தோடத்தான் நாங்க அஞ்சு பேரும் இந்த வீட்ல வாழ்ந்து வர்றோம்!'' என்று கவலைப்படுகிறார் உஷா.

"எங்க வீடும் சுவரெல்லாம் பிளந்து போயி எங்களைப் பயமுறுத்திக்கிட்டே இருக்கு. மூணு மாசத்துக்கு முன்னாடி, கவர்மென்ட்லேந்து இங்க வந்து பார்த்துட்டுப் போனாங்க; அவ்வளவுதான். இன்னும் மராமத்து பண்ணித் தரல. ஊராட்சி ஒன்றியம் ஆபீசுலேந்து வந்து 'பத்தாயிரம் ரூபா பணம் கட்டினாத்தான், பட்டா போட்டுத் தருவோம். இல்லாட்டி வேற ஆளுக்கு மாத்தி விட்டுருவோம்'னு சொல்லிட்டுப் போறாங்க. எங்களுக்கு என்ன பண்றதுன்னே ஒண்ணும் புரியலை!'' என்கிறார் ஜான்சிராணி.

நூறு வீடுகளில், சுமார் இருபது வீடுகளே நல்ல நிலையில் இருக்கின்றன. இவற்றில் மோசமான நிலையில் இருப்பவை பதினைந்து வீட்டுச் சுவர்கள். அவை எப்பொழுது வேண்டுமானாலும் சரிந்து விழலாம். இதனை திருச்சி மாவட்ட ஆட்சியர் கவனத்துக்குக் கொண்டு சென்றோம்.

"நவல்பட்டு சமத்துவபுர வீடுகள் குறித்து, மூன்று மாதங்களுக்கு முன்னரே எங்கள் பார்வைக்குக் கொண்டுவரப்பட்டு, மாவட்ட ஊரக வளர்ச்சித் துறை அதிகாரிகள் பார்வையிட்டனர். பயனாளிகள் சுவர் விரிசல் சின்ன அளவில் ஏற்பட்டபோதே, அவர்கள் செலவில் சீர்செய்திருந்தால், இந்த அளவுக்கு வந்திருக்காது. சுவர் வெடிப்புகளை வேண்டுமானால் சீரமைத்துத் தரலாம். பெரிய அளவில் பாதிக்கப்பட்ட வீடுகள் இன்னும் மூன்று மாதத்துக்குள், மாவட்ட ஊரக வளர்ச்சி முகமை மூலமாகச் செப்பனிட்டுத் தரப்பட உள்ளது!'' என்கிறார் திருச்சி மாவட்ட கலெக்டர் ஆஷிஷ் வச்சானி.

கோவையில் நிகழ்ந்ததுபோல, நவல்பட்டு சமத்துவபுரக் குடியிருப்பில் நிகழ்வதற்கு முன்பாகவே, தங்களது வீடுகள் சீரமைக்கப்பட வேண்டும் என்பதே நவல்பட்டு சமத்துவபுரவாசிகளின் எதிர்பார்ப்பு.

**- கட்டுரை, படங்கள்:**
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



● கே.ராஜேஷ்வர்

# திறமைக்கு மட்டுமே சல்யூட்!

**நீ**ண்ட இடைவேளைக்குப் பிறகு 'இந்திர விழா' மூலம் மீண்டும் இயக்குநர் அவதாரமெடுத்திருக்கிறார், தமிழ் சினிமாவின் சிறந்த கதாசிரியரான கே.ராஜேஷ்வர். அவருடனான சந்திப்பிலிருந்து...

**கோவில்பட்டி வீரலட்சுமிக்குப் பின் ஏன் நீண்ட இடைவெளி...?**

''நான் அன்றுமுதல் இன்று வரை ஓய்வில்லாமல்தான் இருக்கிறேன். நான் படம் இயக்கினால் மட்டுமே வெளியே தெரிகிறது. ஆனால், 'அவள் அப்படித்தான்' காலத்திலிருந்து நான் திரைப்படம் தொடர்பாக ஏதாவது செய்துகொண்டு தான் இருக்கிறேன். என்னுடைய சில பணிகள் வெளியே தெரிவதில்லை.''

**பல தேசிய விருதுப் படங்களின் கதாசிரியர் நீங்கள். இன்று கதாசிரியருக்கு மதிப்பு இல்லாமல் போய்விட்டதே...?**

''தமிழகத்தில்தான் இந்த நிலை. பக்கத்திலுள்ள கேரளாவின் நிலையே வேறு. ஹாலிவுட்டில், இன்றும் திரைக்கதை எழுத்தாளர்கள் மதிப்புடன் இருக்கிறார்கள். முன்பெல்லாம் ஏவி.எம்., நாகிரெட்டி, எல்.வி.பிரசாத் போன்ற தயாரிப்பாளர்கள் கதை விஷயத்தில் கவனமாக இருந்தார்கள். இப்போது அந்த நடைமுறை மற்றவர்களால் கடைபிடிக்கப் படாதது, வருத்தத்துக்குரியது.''

**கமல், ரஜினிக்கெல்லாம் கதை எழுதிய நீங்கள், பெரிய நட்சத்திரங்களை வைத்து இயக்காதது ஏன்?**

''எனக்கு என்றைக்குமே நட்சத்திரங்களின் மீது பிரமிப்பு இருந்ததில்லை. நண்பர்களாக இருந்த நட்சத்திரங்கள் வேண்டுமானால், என் படத்தில் நடித்திருக்கலாம். நான் நடிப்பவர்களின் திறமை கண்டு வியந்து போவேனே தவிர, அவர்களின் இமேஜைப் பார்த்து மலைப்பதில்லை.''

**'இந்திர விழா' எப்படிப்பட்ட படம்?**

''இது ஒரு ரொமான்டிக் த்ரில்லர். முன் பாதியில் காதலாக நகரும் கதை, மறு பாதியில் பயங்காட்டிப் பறக்கும். மேல்தட்டு வர்க்கத்து மக்கள் மத்தியில், இன்று பரவியிருக்கும் மிக முக்கிய பிரச்னை ஒன்றை கதைக் கருவாக எடுத்துக் கொண்டிருக்கிறேன்.''

– **மதுமிதா**

‘தோட்டா’ - ஜீவனின் அடுத்த படம். ‘மச்சக்காரன்’ சரியாகப் போகாத நிலையில் ‘தோட்டா’வை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஜீவனுடன் பேசினோம்.

“வெற்றி - தோல்வியை எல்லாம் எப்பவும் நான் மனசுக்கு எத்தறதில்ல. எது நடக்குதோ அதை அப்படியே ஏத்துக்கற மனப் பக்குவம் உள்ளவன் நான். நோ ஃபீலிங்ஸ்.

‘தோட்டா’ல என் பேர்தான் தோட்டா. ரௌடி கேரக்டர். ப்ரியாமணி காலேஜ் ஸ்டூடண்ட். ரெண்டு பேருக்குள்ள மொட்டு விடுற அன்பைத்தான் அதிரடியா சொல்லியிருக்கோம். வழக்கமான பாதையில் போகாம, புது ரூட்ல திரைக்கதை பிடிச்சிருக்கார் டைரக்டர் செல்வா. இது அவருக்கு 18வது படம். உணர்ச்சியைத் தூண்டும் படமல்ல; உணர்வுகளைத் தொட்டுத் தாலாட்டும் படம்.

‘தோட்டா’வுக்காக ஏற்கெனவே 12 நாட்கள் ஷூட்டிங் நடந்தது. அப்புறம் ஒரு இடைவெளிக்கப்புறம் மறுபடியும் படப்பிடிப்பை ஆரம்பிச்சோம். பழைய 12 நாளை அப்படியே மறந்துட்டுப் புதுசா வேலையைத் தொடங்கிட்டோம்.

ப்ரியா மணி ரொம்ப டேலண்டட் ஆர்ட்டிஸ்ட். அவரும் நானும் போட்டி போட்டு நடிச்சிருக்கோம். என்னை இன்னும் அழகாவும் அனலாவும் வடிவமைச்சிருக்கார் செல்வா. இது அவர்கிட்ட எனக்கு ரெண்டாவது படம். ‘நான் அவனில்லை’ மாதிரி இதுவும் உறுதியான வெற்றிதான். இருந்தாலும், அவங்கவங்களுக்கான பங்கை ரொம்பத் தெளிவா நிறைவேத்திடணும் இல்லையா! அதனால கடினமா உழைச்சுக்கிட்டிருக்கோம்.”

- அஞ்சலி

# என் பெயர் தோட்டா!





# 2 இன் 1

**புத்தகத்துக்குள் புத்தகம்; புதுமையின் இருப்பிடம்!**

பிரித்து.................................எடுக்கனும்
பிறகு.......................................மடிக்கனும்
அப்புறம்..........................கத்தரிக்கனும்
அழகாய்........................இணைக்கனும்



## 16 பக்க மினி கோகுலம் ரெடி!

**இம்மாத மினி கோகுலத்தில்..... க்விஸ் 2007**

**படிக்க மட்டுமல்ல; பாதுகாக்கவும்!**



உங்கள் பிள்ளைகளின் கைகளுக்கும் வேலை அளித்து, பொது அறிவுச் செய்திகளையும் தரும் புதுமையான பகுதி!

| தனிப்பிரதி ரூ.8/- | ஓர் ஆண்டு சந்தா ரூ.96/- |
| --- | --- |

இப்போது கடைகளில் பிப்ரவரி 2008

# கோகுலம்

சந்தாவை எம்.ஓ., டி.டி. அல்லது உள்ளூர் காசோலையாக அனுப்ப வேண்டிய முகவரி

சர்க்குலேஷன் மேனேஜர்,
கோகுலம் - தமிழ்
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

As per BIS
IS:2888 1983



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்

The Company is proposing, subject to market conditions and other considerations, an offer on a rights basis of its equity shares and has filed a Draft Letter of Offer with SEBI which is available on the website of SEBI ...

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.

# "இன்றைய சிறிய முதலீட்டின் மூலம் ஒரு சிறப்பான எதிர்காலத்தை உருவாக்கிடுங்கள்"

உங்களது முதலீடு ஒரே வருடத்தில் இரு மடங்காக வாய்ப்பு !



# சன்டெக் கோ-ஆப் சிட்டி



**FOR SALE 230 PLOTS**

**Rs. 750/- சதுர அடி**

கூடுதல் கட்டணம் எதுவும் இல்லை

## மனை விலையில் 40% செலுத்தி மனையை முன்பதிவு செய்யலாம்.



சென்னை-பெங்களூர் நெடுஞ்சாலையில், ஸ்ரீபெரும்புதூருக்கு முன்னதாக பூந்தமல்லி மற்றும் குயின்ஸ்லேண்டிற்கு அருகில் உள்ளது. EMPEE டிஸ்டிலரிஸ் சந்திப்பிற்கு வெகு அருகில் அமைந்துள்ளது.






DTCP APPROVED

**SALIENT FEATURES :**

- Site is fully ready with all amenities
- அங்கீகாரம் பெற்ற மனைகள் (LP/DTCP No. 53/2007)
- 8% ஸ்டாம்ப் டியூட்டி முற்றிலுமாக நீக்கப்பட்டுள்ளது
- தண்ணீர் வசதி மற்றும் தார்ச்சாலைகள்
- தகுதியுடையோருக்கு வங்கிக்கடன் வசதி செய்து கொடுக்கப்படும்
- மொத்த மனைக்கும் முழுமையான சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டுள்ளது
- 24 மணி நேர செக்யூரிட்டி வசதி

**Rs.750/-**



**Karthikeyapuram**
Co-op Building Society Ltd. (J.J. No. 345)
Registered Under Co-op Society Act 1983
www.suntechcoopcity.com

**FOR FREE SITE VISIT CONTACT :**
New No. 132, 1st Floor, Thirumala Complex,
(Near Hotel Swagath, Opp. P.F. Office),
Royapettah High Road, Chennai - 14.

**Cell : 97899 85510, 97899 85548, 97899 85549.**